கோவை இலவச மருத்துவ சேவை மையம்
நடத்திய கண் சிகிச்சை முகாம்




ரூ.20/- | பிப்ரவரி 2021 மாசி | தீபம்: 9 ஒளி: 2

# 24 மனை குலமுரசு

தமிழ் மாத இதழ்



# 24 மனை குலமுரசு

தமிழ் மாத இதழ்

RNI No.: TNTAM/2013/48200

தீபம்: 9  ஒளி: 2

பிப்ரவரி 2021 மாசி

24 மனை தெலுங்கு செட்டியார்கள் இனமக்களுக்காக
24 மனை தெலுங்கு செட்டியார்கள் சேரிட்டபிள் டிரஸ்ட்
அறக்கட்டளையால் நடத்தப்படும் அரசியல் சார்பற்ற சமூக மாத இதழ்

24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமைச் சங்கம்
கீழ்ப்பாக்கம், சென்னை - 600010.

சிறப்பாசிரியர்:
**கரூர் கே.சி. பழனிசாமி**
Ex.M.P., Ex.MLA.,

ஆசிரியர்:
**Dr. துரை அங்குசாமி**
M.A.,B.L.S.,B.Ed.,Ph.D.,

40 லட்சம் மக்களின் நாடித்துடிப்பு
24 மனை குலமுரசு மாத இதழ்

**ஆண்டு சந்தா ரூ. 200/-**

ஆண்டு சந்தா செலுத்தும் முறை

| | |
|---|---|
| Account Name | : 24 MANAI KULAMURASU |
| Bank Name | : CANARA BANK |
| Branch | : CHENNAI KILPAK |
| Account Number | : SB. A/c. 1650101014869 |
| IFSC CODE | : CNRB0001650 |

மேற்கண்ட வங்கிக் கணக்கில் ஆன்லைன் மூலம் ரூ.200/- செலுத்தி அதன் பரிவர்த்தனை விபர ஸ்கிரீன்ஷாட்-ஐ **9965 900 990** என்ற வாட்ஸ்அப் எண்ணிற்கு (அ) **kulamurasuoffice@gmail.com** என்ற மின்னஞ்சல் முகவரிக்கு உங்கள் முகவரி மற்றும் செல்போன் எண் குறிப்பிட்டு அனுப்பவும்.

கனரா வங்கியில் செலான் மூலம் பணமாக செலுத்துவோர் சந்தா ரூ.200 + வங்கி சேவைக் கட்டணம்+GSTவரி ரூ.60 சேர்த்து ரூ.260/-ஐ கனரா வங்கிக் கணக்கில் செலுத்தி, கௌண்டர் ஃபைல் ரசீது நகலுடன் உங்கள் முகவரி எழுதி மின்னஞ்சல் (அ) வாட்ஸ்அப் (அ) தபாலில் அனுப்பவும்.

24 மனை குலமுரசு,
330/1, சின்னாண்டான் கோவில் வீதி,
கரூர் - 639001.

Customer Care Cell: **9965 900 990**
E-Mail: **kulamurasuoffice@gmail.com**
K.C.S.R.சிவக்குமார் - Ph: 04324-240663


# ஆசிரியர் குரல்



## வாழ்த்துக்களுக்கு... வணக்கங்கள்!

'தமிழ்ச்செம்மல்' விருதளித்து தமிழறிஞருக்கான அங்கீகாரத்தை வழங்கிய தமிழக அரசுக்கு தலைவணங்கி, கரம்கூப்பி நன்றி கூறுகிறேன்.

தன்னடக்கத்தோடும் பணிவோடும் இந்த விருதினை தெய்வங்களாகிவிட்ட என் தாய், தந்தை, மனைவிக்கு சமர்ப்பணம் செய்வதில் மகிழ்வடைகிறேன்.

தமிழ்ச்செம்மல் விருதுக்கு முற்றிலும் தகுதியானவர் இவர் என சான்றிதழ்கள் வழங்கிய முதுபெரும் அறிஞர்கள்
முனைவர் (புலவர்) ராசு, தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழக கல்வெட்டியல் துறைத் தலைவர் (ப.நி)
முனைவர் இர.பூங்குன்றன்
(முன்னாள் உதவி இயக்குநர், தொல்லியல்துறை)
முனைவர் பெ. சுப்பிரமணியன்
(தகைசால் தமிழ்ப் பேராசிரியர்- Professor Emeritus)
ஆகிய தமிழ்ச் சான்றோர்களுக்கு நெஞ்சினிக்கும் நன்றி.

விருதுக்குப் பரிந்துரைத்து பேருதவி புரிந்த பெருந்தகை, பண்பாளர், கால்நடைப் பராமரிப்புத்துறை அமைச்சர், மாண்புமிகு உடுமலை கே.இராதாகிருஷ்ணன் அவர்களுக்கு மனமினிக்கும் நன்றியை சமர்ப்பிக்கின்றேன்.

விருது அறிவிக்கப்பட்ட மறுகணத்திலிருந்து வாழ்த்து செய்திகளை வான்மழையாகப் பொழிந்த உறவுகட்கும் நட்பு வட்டத்திற்கும், தமிழார்வலர்களுக்கும், குலமுரசு வாசகர்களுக்கும் அன்பிற்கினிய நன்றி.

**- துரை அங்குசாமி**




புதிய சந்தா பதிவு செய்தல், புதுப்பித்தல், முகவரி மாற்றம் மற்றும் மணக்கோலம் பகுதியில் சேர்க்க மற்றும் திருத்தம் செய்ய தொடர்பு கொள்ளவேண்டிய செல்பேசி / டெலிகிராம் / வாட்ஸ்ஆப் எண்:

**99 65 900 990**

(காலை 10 மணி முதல் மாலை 7 மணி வரை)




/24manaikulamurasu  https://kulamurasu.blogspot.com




# முதலமைச்சர் மாண்புமிகு எடப்பாடி K.பழனிசாமி அவர்கள் குலமுரசு ஆசிரியர் முனைவர் துரை அங்குசாமி அவர்களுக்கு தமிழ்ச்செம்மல் விருது அளித்து கௌரவித்தார்

தமிழறிஞர்களுக்கு வழங்கப்படும் உயர்ந்த விருதான தமிழ்ச்செம்மல் விருதை 24 மனை குலமுரசு பத்திரிகையின் ஆசிரியர். முனைவர் துரை அங்குசாமி அவர்களுக்கு மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு.எடப்பாடி கே.பழனிசாமி அவர்கள் 01.02.2021 திங்கட்கிழமை காலை 11 மணிக்கு வழங்கி கௌரவித்தார்.

ஒவ்வொரு ஆண்டும் சித்திரை வருடப் பிறப்பு, தைப்பொங்கல் ஆகிய தினங்களில் தமிழறிஞர்களை பெருமைப்படுத்தும் வகையில் பல்வேறு விருதுகளை தமிழ்நாடு அரசு வழங்குகிறது. 2020க்கான விருது வழங்கும் விழா தமிழ்நாடு அரசின் தலைமைச் செயலகத்தில் முதல்வர் அலுவலக அரங்கில் 01.02.2021அன்று சிறப்பாக நடைபெற்றது.

தமிழ்ச்செம்மல் விருதுக்கான அரசாணை (GO) பிறப்பிக்கப்பட்டவுடன் தமிழ் வளர்ச்சித் துறை அலுவலர் முறையாகத் தெரிவித்து வரவேற்ற முறை போற்றத்தக்கது.

ஒவ்வொரு விருதாளருக்கும் ஒரு அலுவலரை நியமித்து ஊரிலிருந்து புறப்படும் நேரம், சென்னை வந்து அடைந்த செய்தி, விழாவுக்கு வருகை தரும் நேரம் முதலிய ஒவ்வொன்றும் உறுதிப்படுத்தி முறையான ஏற்பாடுகளை செய்திருந்தனர்.

தமிழ் வளர்ச்சி இயக்குநரகத்திலிருந்து முதலமைச்சர் அலுவலகத்திற்கு மிகுந்த மரியாதையுடன் அழைத்துச் சென்று தமிழறிஞர்கள் அனைவரையும் நன்கு விருந்தோம்பினர்.

அரங்குக்குள் ஒவ்வொருவராக அனுப்பப் பட்டனர். அங்கு மாண்புமிகு முதலமைச்சர் எடப்பாடி K.பழனிசாமி, மாண்புமிகு தமிழ் வளர்ச்சி மற்றும் பண்பாட்டுத் துறை அமைச்சர் மா.பா.பாண்டியராஜன், மாண்புமிகு அமைச்சர் கடம்பூர் ராஜூ, தலைமைச் செயலாளர் ராஜீவ் ரஞ்ஜன், தமிழ் வளர்ச்சி இயக்குநர் முனைவர் விஜயராகவன் ஆகியோர் வரவேற்றனர்.

உள்ளே நுழைந்ததும் மாண்புமிகு முதலமைச்சரை வணங்க கரம் கூப்புவதற்கு முன்னரேயே அவரே கரங்கூப்பி வணங்கி வரவேற்ற பண்புடைமையை சொல்லிப் போற்ற வார்த்தைகளே இல்லை. சங்க காலத்தில் தமிழ்ப் புலவர்களைப் போற்றிய மாமன்னர்களின் வாழ்வியல் தான் நினைவுக்கு வந்தது.

மாண்புமிகு முதலமைச்சர் எடப்பாடி K.பழனிசாமி அவர்கள் பொன்னாடை அணிவித்து தான் கையொப்பமிட்ட தமிழ்ச்செம்மல் விருதை அளித்து பெருமைப்படுத்திய நிகழ்வு தமிழறிஞர்கள் ஒவ்வொருவர் வாழ்விலும் ஒரு வைர நிகழ்வாகும்.

ரூ.25,000க்கான காசோலை விருதுடன் இணைத்து பொன்முடிப்பாக வழங்கப்பட்டது.

தமிழறிஞர்கள் வாழ்நாள் முழுவதும் தமிழக அரசின் பேருந்தில் கட்டணமின்றிப் பயணம் செய்யும் இலவச பாஸ் இவ்விருதாளர்கட்கு உண்டு என்பது குறிப்பிடத்தக்கது.

நிகழ்வு முடிந்தவுடன் தமிழ் வளர்ச்சித் துறையினர் விருந்தோம்பி, வாழ்த்துக் கூறி வழியனுப்பி வைத்தனர்.

– தொகுப்பு : **S.முத்தையா,** *தலைமைச் சங்க தலைமை நிலைய மேலாளர்.*

---

# தளவாய்பேட்டையில் வம்மையர் குலவழிபாடு

ஈரோடு மாவட்டம் தளவாய்பேட்டை 24 மனை தெலுங்கு செட்டியார்களின் 16 வீடு வம்மையவர் கோத்திரத்தாரின் குலதெய்வம் அருள்மிகு ஸ்ரீ வீரமாத்தி அம்மன், ஸ்ரீ வீரபத்திர சுவாமி, ஸ்ரீ சப்த கன்னிமார் ஆகிய குலதெய்வங்களின் தைப்பொங்கல் விழா மற்றும் குலதெய்வ வழிபாடு விழா கடந்த தை மாதம் 1,2 தேதிகளில் 14,15.1.2021, வியாழன், வெள்ளி ஆகிய இருநாட்கள் மிக எளிமையான முறையில் நடைபெற்றது.




முன்னதாக இக்கோவிலின் கட்டுமானத் திருப்பணிக்காக கடந்த 31.12.2020 வியாழக் கிழமை அன்று வாஸ்து, பாலாலய பூஜை விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது

தை 1ம் நாள் 14.1.2021 வியாழக்கிழமை அன்று காலை 6 மணிக்கு கணபதி பூஜையுடன் விழா தொடங்கியது தொடர்ந்து 8 மணிக்கு ஸ்ரீவீரமாத்தி அம்மன், ஸ்ரீவீரபத்திர சுவாமி, ஸ்ரீசப்த கன்னிமார்கள் ஆகிய சாமிகளின் படங்களுக்கு சிறப்பு பூ அலங்காரம் செய்யப்பட்டு சிறப்பு பூஜைகள், ஆராதனைகள் நடைபெற்றது.

மறுநாள் 15.1.2021 வெள்ளிக்கிழமை அன்று காலை 6 மணிக்கு சுவாமிக்கு சிறப்பு அலங்காரம் செய்யப்பட்டு பூஜைகள் நடைபெற்றன. விழா நடைபெற்ற இரு நாட்களுக்கும் வந்திருந்த அனைவருக்கும் சிறப்பான முறையில் அன்னதானம் வழங்கப்பட்டது.

விழாவில் வம்மையவர் கோத்திர பங்காளிகள் மற்றும் உறவினர்கள் சமூக மக்கள் என ஏராளமானோர் கலந்து கொண்டு சிறப்பித்தனர். விழா ஏற்பாடுகளை தளவாய் பேட்டை 24 மனை தெலுங்கு செட்டியார்கள் வம்மையவர் கோத்திர குல பங்காளிகள் திருவிழா கமிட்டியினர் மிகச் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்தனர்



– **அ.சுரேஷ்,**
குலமுரசு நிருபர்,
பள்ளிபாளையம்

# சித்தோட்டில் வாஜ்யவர் குலதெய்வ வழிபாடு

ஈரோடு மாவட்டம் சித்தோட்டில் 16 வீடு வாஜ்யவர் கோத்திரத்தார் வழிபடும் ஸ்ரீ நாச்சியாரம்மன் திருக்கோவிலில் தைப் பொங்கல் குல தெய்வ வழிபாடு நடைபெற்றது.

தை மாதம் ஒன்றாம் தேதி 14.1.2021 வியாழக்கிழமை அன்று காலை 10 மணிக்கு




ஸ்ரீ நாச்சியாரம்மனுக்கு சிறப்பு அலங்காரம் செய்யப்பட்டு பூஜைகள் தொடங்கியது. பிற்பகல் ஒரு மணிக்கு உச்சி கால பூஜைகளும் ஆராதனைகளும் நடைபெற்று பிரசாதம் வழங்கப்பட்டது. தொடர்ந்து வந்திருந்த அனைவருக்கும் சிறப்பான முறையில் அன்னதானம் வழங்கப்பட்டது. விழாவிற்கான ஏற்பாடுகளை சித்தோடு 24 மனை தெலுங்கு செட்டியார்கள் வாஜ்யவர் கோத்திர பூசாரிகள் பங்காளிகள் மிகச் சிறப்பாக செய்திருந்தனர்.

# குமாரபாளையத்தில் வம்மையவர் குலதெய்வ வழிபாடு

நாமக்கல் மாவட்டம் குமாரபாளையம் ஸ்ரீ பட்டத்தரசி அம்மன் கோவில் அருகில் அமைந்திருக்கும் வம்மையவர் கோத்திர பங்காளிகளுக்கு பாத்தியப்பட்ட ஸ்ரீ வீரபத்திரர், ஸ்ரீ வீரமாத்தி அம்மன் திருக்கோயில் உள்ளது. வருடந்தோறும் தை மாதம் 1ஆம் நாள் வம்மையவர் கோத்திரப் பங்காளிகள் அனைவரும் ஒன்று கூடி குலதெய்வ வழிபாட்டை இன்றுவரை மிகச் சிறப்பாக நடத்திவருகிறார்கள்.

அதன்படி இந்த ஆண்டு விழா 14.1.2021 வியாழக்கிழமை தை மாதம் 1ஆம் நாள் அன்று அதிகாலை 6 மணிக்கு முதல் காலபூஜைகள் தொடங்கி நடைபெற்றது. ஸ்ரீ வீரபத்திரர் ஸ்ரீ வீரமாத்தி அம்மன் போட்டோவிற்கு பூக்களை கொண்டு மிக பிரமாண்ட அலங்காரம் செய்யப்பட்டு சிறப்பு பூஜைகள் நடந்தன. அதிகாலையிலேயே இப்பூஜையை காண ஏராளமானோர் வந்திருந்தனர்.

மதியம் 12 மணிக்கு உச்சி கால பூஜை சிறப்பாக நடந்தது. பூஜையின் முடிவில் அனைவருக்கும் பிரசாதம் வழங்கப்பட்டது. இவ்விழாவிற்கு ஏராளமான வம்மையவர் கோத்திர பங்காளிகள் மற்றும் அவர்களின் உறவின்முறையோர்கள், சமூக சொந்தங்கள் கலந்து கொண்டு விழாவை சிறப்பித்தனர். விழாவிற்கான ஏற்பாடுகளை 24 மனை தெலுங்கு செட்டியார்கள் வம்மையவர் குல கோத்திர பங்காளிகள் மிகச் சிறப்பாக செய்திருந்தனர்.

– **அ.சுரேஷ்,** குலமுரசு நிருபர், **பள்ளிபாளையம்.**



# கடவுளைக் காட்டுங்க!



நாமதேவருடைய குருகுலத்தில் பயின்ற மாணவர்களில் சைதன்யனும் ஒருவன். மற்ற மாணவர்களைக் காட்டிலும் மிகவும் புத்திசாலியாக இருந்த சைதன்யனை குருவுக்கு மிகவும் பிடித்திருந்தது. ஆகவே, தனக்குக் தெரிந்த அனைத்தையும் நாமதேவன் சைதன்யனுகுக் கற்றுக் கொடுத்தார். குருகுலத்தில் பல ஆண்டுகள் பயின்ற சைதன்யனுக்கு வயது பதினெட்டு ஆயிற்று.

ஒரு நாள் நாமதேவர் அவனை அழைத்து, 'மகனே நீ கற்றுக்கொள்ள வேண்டிய அனைத்தையும் தெரிந்து கொண்டுவிட்டாய். இத்துடன் குருகுலவாசம் உனக்கு போதும். நீ இனி உன் பெற்றோரிடம் சென்று அவர்களுக்குத் தொண்டு செய்வாய். கடவுள் எப்போதும் உனக்குத் துணை இருப்பார்,' என்று வாழ்த்தினார்.

தனது குருவை தரையில் விழுந்து வணங்கிய சைதன்யன் அவரிடம் பணிவாக, 'குருவே எனக்கு எவ்வளவோ பாடங்கள் கற்றுக் கொடுத்தீர்கள். ஆனால், எந்தக் கடவுளைப் பற்றி இப்பொழுது குறிப்பிட்டீர்களோ அவரை மட்டும் எனக்குக் காட்டவில்லையே! கண்ணால் காண முடியாத கடவுள் எவ்வாறு எனக்குத் துணை இருப்பார்?' என்று வினவினான்.

'சைதன்யா உன்னுடைய சந்தேகத்திற்கு பிறகு ஒரு நாள் விடை அளிக்கிறேன். நீ இப்போது வடக்கு திசையில் உள்ள காட்டின் வழியே சுசந்த நகர் எனும் நகரத்தைத் தாண்டி பவானிபுரத்திற்கு சென்று அங்குள்ள என் சகோதரனை சந்தித்து அவனுடைய சேமலாபங்களை விசாரித்துக் கொண்டு வா?' என்றார்.

'அப்படியே செய்கிறேன் குருவே', என்று பதிலளித்தான் சைதன்யன். குருவின் மனைவி கொடுத்த உணவுப் பொட்டலங்களுடன், மறுநாள் காலையில் கிளம்பினான் சைதன்யன்.

*குருகுலம் – சைதன்யன்*

நண்பகல் நேரம் காட்டு வழியில் பாதியைக் கடந்து விட்டான். அப்போது அவனுக்கு மிகவும் கொண்டிருப்பது என்ன மூலிகை?' என்றான்.

'இது பாம்புக் கடிக்கான மூலிகை. இந்த மூலிகையின் சாறை பாம்பு கடித்தவன் வாயில் விட்டால், விஷம் இறங்கிவிடும். நீ காட்டு வழியில் சுற்றுகிறாயே... இந்த மூலிகையை கொஞ்சம் வைத்துக்கொள்,' என்று சில இலைகளைக் கொடுத்தான்.

அவற்றை பத்திரமாக வைத்துக்கொண்ட சைதன்யன், 'ஐயா, குடிக்க தண்ணீர் கிடைக்குமா?' என்று கேட்டான்.

'அருகில் ஒரு கிணறு உள்ளது!' என்று கிணறு இருக்கும் இடத்தைக் காட்டினான்.

அந்தக் கிணற்றை அடைந்து தாகம் தீரத் தண்ணீர் குடித்தபின், ஒரு மரத்தடியில் அமர்ந்து உணவு உண்டுவிட்டு அப்படியே உறங்கிவிட்டான் சைதன்யன். அவன் மீது ஏதோ

இடித்துவிட்டு ஓடுவது தெரிந்து திடீரெனக் கண் விழித்த சைதன்யன் கண்களில் வேகமாக ஓடும் ஒரு முயல் தென்பட்டது.

திடீரென மரத்தில் ஏதோ சத்தம் கேட்க, நிமிர்ந்து பார்த்தால் ஒரு பெரிய கிளை ஒடிந்து கீழே விழ இருந்தது. உடனே நகர்ந்து விட தற்செயலாக உயிர் தப்பினான் சைதன்யன்.

அங்கிருந்து பயணத்தைத் தொடர்ந்த சைதன்யன் இருட்டும் நேரத்தில் சுசாந்த நகரை அடைந்தான். அங்கு பசியால் வாடிய ஒரு பிச்சைக்கார குடும்பத்திற்கு எஞ்சிய உணவுகளை கொடுத்துவிட்டு அன்று இரவு ஒரு சத்திரத்தில் தங்கினான்.

நடு இரவில் ஏதோ சத்தம் கேட்டு திடுக்கிட்டு எழுந்த சைதன்யன் தன் அருகில் உறங்கிக் கொண்டிருந்த மனிதனின் வாயில் நுரைதள்ள முனகிக் கொண்டிருபதைப் பார்த்தான்.

கொஞ்ச தூரத்தில் ஒரு விஷப்பாம்பு ஓடிக்கொண்டிருப்பதை பார்த்தான். அந்த மனிதனின் அபாய நிலையை உணர்ந்த சைதன்யன் உடனே தன்னிடமிருந்த விஷக்கடி மூலிகைகளை எடுத்து சாறு பிழிந்து அந்த மனிதனின் வாயில் விட்டான். சற்று நேரத்திற்க்கெல்லாம் அவன் சாதாரண நிலையை அடைந்தான்.

அந்த நபர் யாருமல்ல! குடிமக்களின் குறைகளை அறிய மாறுவேடம் பூண்டு இரவில் திரிந்த அந்த நாட்டு மந்திரி.

சைதன்யனுக்குத் தன் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்த மந்திரி, 'நீ என் உயிரைக் காப்பாற்றினாய். அதற்க்கு செய் நன்றியாக உனக்கு மன்னரிடம் வேலை வங்கித் தருகிறேன்,' என்றார்.

'மிகவும் நன்றி ஐயா. ஆனால், நான் முக்கிய அலுவலகமாக பவானிபுரம் சென்று கொண்டிருக்கிறேன். சில தினங்கள் கழித்து உங்களை சந்திக்கிறேன்,' என்று கூறி மந்திரியிடமிருந்து விடைப் பெற்றுக்கொண்டான்.

மறுநாள் காலை பவானிபுரத்தை அடைந்து குருவின் சகோதரரை சந்தித்து சேமலாபங்களை விசாரித்து அறிந்து, பிறகு தன் குருவிடம் திரும்பினான் தான் சென்று வந்த விவரங்களையும், அவரது சகோதரனைப் பற்றியும் விளக்கிக் கூறினான்.

'மகனே, நினைவிருக்கிறதா? கண்ணால் காண முடியாத கடவுள் எங்கே என்று வினவினாய் அல்லவா? அந்த சந்தேகத்திற்கு நான் ஏதும் விளக்கம் கூறாமல் உனக்கு விடை கிடைத்து விட்டது. கடவுளைப் பார்த்து விட்டாய் அல்லவா?' என்றார்.

'நானா! நான் எங்கே கடவுளைப் பார்த்தேன்? பார்க்கவில்லையே!' என்றான் ஆச்சரியத்துடன் சைதன்யன்.

'மகனே கடவுள் எப்போதும் எல்லா இடங்களிலும் காணப்படுகிறார். ஆனால், ஒரே உருவத்தில் அவர் உனக்குத் தோன்றவில்லை,' என்றார்.

'எந்த குருட்டு முதியவர் உனக்கு பாம்பின் விஷக்கடிக்கான மூலிகை தந்தாரோ, அவர் கடவுள். காட்டிலும் கூட கிணற்றின் தேவை ஏற்ப்படும் என்று எண்ணி, யாரோ ஒருவன் கிணறு தோண்டி இருந்தானே, அவனும் கடவுள் தான். உன்னுடைய உயிரைக்காப்பற்றிய முயலும் கடவுள் தான். எந்த மந்திரியை பாம்புக் கடியிலிருந்து நீ பிழைக்க வைத்தாயோ, அவருக்கு நீ கடவுள். இவ்வளவு உருவங்களில் கடவுளைக் கண்ட பிறகுமா கடவுளை நான் காணவில்லை என்று நீ கூறுகிறாய்?' என்றார்.

குருவின் வார்த்தைகளில் இருந்த உண்மையை அறிந்து உணர்ந்ததும் சைதன்யனுக்கு ஞானோதயம் உண்டாயிற்று. தனக்கு ஞானோதயம் உண்டு பண்ணிய குருவை விழுந்து வணங்கி விட்டு, அவரிடமிருந்து விடை பெற்றான்.

இதற்குப் பிறகு சைதன்யன் தன் பெற்றோரை அழைத்துக்கொண்டு சுசாந்த நகரை அடைந்து மந்திரியை சந்தித்தான். மந்திரியின் உதவியால் அவனுக்கு அரசாங்கத்தில் நல்ல வேலையும் கிடைத்தது.

அ
ரு
ளு
ரை

# கோவை 24 மனை தெலுங்கு செட்டியார்கள் இலவச மருத்துவ மையம் இலவச கண் சிகிச்சை முகாம்

கோவை 24 மனை தெலுங்கு செட்டியார்கள் இலவச மருத்துவ மையம் 2021 ஜனவரி 24 ம் தேதி ஞாயிற்றுக்கிழமை நடத்திய இலவச கண் சிகிச்சை முகாம் மிகவும் சிறப்பாக நடந்து முடிந்தது. சுமார் ஒரு மாதத்திற்கு முன்னரே திட்டமிட்டு, நோட்டீஸ் அடித்து அக்கம் பக்கத்திலுள்ள மக்களுக்கு தெரியப்படுத்தி, கண் சிகிச்சை முகாமில் கலந்து கொள்ள விருப்பமுள்ளவர்கள் முன்பதிவு செய்யப்பட்டனர். சுமார் 30 பேர் முன்பதிவு செய்தனர்.

ஜனவரி 24 ஞாயிறு காலை 9.30 மணியளவில் Dr. A.சீனிவாசன், Dr. S.நவீன் குழுவினர் Dr.R.பாலமுருகன், Dr.R.அருண்பிரசாத், சதர்ன் மெட்டல் பிரகாஷ், செல்வம் ஆகியோர் முன்னிலையில் M.P.K. சீனிவாசன் அவர்கள் பூஜை செய்ய, கண்சிகிச்சை முகாம் ஆரம்பித்தது.

நோயாளிகள் சுலோசனா பார்மசியில் பதிவு செய்துவிட்டு, நமது கிளினிக் டாக்டரிடம் B.P. மற்றும் சர்க்கரை அளவு பார்த்தபின் 3-வது மாடியில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கண் பரிசோதனை மையத்திற்கு சென்றனர். அங்கே முதலில் கண்பார்வை (Refraction) மற்றும் கண் அழுத்தம் (pressure) ஆகியவை அனுபவம் வாய்ந்த டெக்னீசியன்களால் பரிசோதனை செய்தபின் Dr. A.சீனிவாசன், Dr.S.நவீன் அவர்களால் சிறப்பு கண் மருத்துவ ஆலோசனை வழங்கப்பட்டது.

41 நோயாளிகள் இம்முகாமில் கலந்து கொண்டு பயனடைந்தனர். இதில் மூவருக்கு



இலவசமாக தனது மையத்தில் கண் அறுவை சிகிச்சை கூடிய விரைவில் Dr. A. சீனிவாசன் செய்ய உள்ளார். கண் கண்ணாடி, மற்றும் தொடர் கண் சிகிச்சை தேவைப்படுவோருக்கு இலவசமாக மதுரை கண் மையத்தில் கொடுப்பதாக அவர் உறுதியளித்துள்ளார்.




திருவாளர்கள் S. தண்டபாணி, நடராஜன், ரவீந்திரன், சதர்ன் மெட்டல் பிரகாஷ், பிரதீப், M.P.K. சீனிவாசன், Dr. R.அருண் பிரசாத், Dr. R.பாலமுருகன், Dr. N.செல்வராஜன் ஆகியோர் கலந்துகொண்டு சிறப்பித்தனர். Dr. விஜயநிர்மலா மற்றும் திரு.செல்வம், சுலோசனா பார்மசி ஊழியர்கள் கலந்துகொண்டு உதவிசெய்தனர்.

அனைவரையும் பார்த்து முடித்தவுடன், முகாமை முன்னிருந்து மேற்பார்வை செய்து நடத்திய Dr. N.செல்வராஜன், Dr.R.அருண்பிரசாத், M.P.K. சீனிவாசன் ஆகியோர் இனி மாதமொருமுறை ஒரு விஷேச மருத்துவ முகாம் நடத்தலாம் என்று முடிவெடுத்து, அனைவருக்கும் நன்றி சொல்ல, முகாம் சுமார் 2 மணிக்கு முடிவடைந்தது.

---



மாண்புமிகு கால்நடை பராமரிப்புத்துறை அமைச்சர் திரு. உடுமலை கே. ராதாகிருஷ்ணன் அவர்கள், 20-01-2021 திருப்பூர் மாவட்டம், பல்லடம் சாலை மாவட்ட கண்காணிப்பாளர் அலுவலக வளாகத்தில், பொது மக்கள் பயன்பெறும் வகையில் புதிதாக கட்டப்பட்ட காவலர் நல உணவகத்தினை திறந்து வைத்து பார்வையிட்டார். அருகில் மாவட்ட ஆட்சித் தலைவர் டாக்டர் க.விஜயகார்த்திகேயன், இ.ஆ.ப. அவர்கள், கோவை மேற்கு மண்டல காவல்துறை தலைவர் திரு. கு.பெரியய்யா இ.கா.ப., அவர்கள், மாவட்ட காவல் கண்காணிப்பாளர் திருமதி. திஷா மிட்டல், இ.கா.ப., அவர்கள், பல்லடம் சட்டமன்ற உறுப்பினர் திரு.கரைப்புதூர் ஏ.நடராஜன் அவர்கள், மாவட்ட வருவாய் அலுவலர் திரு.கு.சரவண மூர்த்தி அவர்கள் ஆகியோர் உடன் உள்ளனர்.



# தமிழ்நாடு அரசின் தமிழ்ச்செம்மல் விருது பெற்ற முனைவர் துரை அங்குசாமி அவர்களுக்கு பாராட்டு விழா

உடுமலைப்பேட்டை நேரு வீதி அருள்மிகு காமாட்சியம்மன் திருக்கோவில் அரங்கத்தில், 13-2-2021 சனிக்கிழமை, காலை 10 மணிக்கு, நூல்கள் பல எழுதியவரும், இலக்கிய சொற்பொழிவாளரும், உடுமலை வட்டத்தின் தொல்லியல் வரலாற்றை எழுதிய ஆராய்ச்சியாளராகவும், கவிஞர் - பத்திரிக்கை ஆசிரியர் - வர்ணனையாளர் என பன்முகத் தமிழ் திறன்கொண்ட முனைவர் துரை அங்குசாமி அவர்களுக்கு, தமிழ்நாடு அரசின் 'தமிழ்ச் செம்மல்' விருதை தமிழக முதலமைச்சர் மாண்புமிகு எடப்பாடி கே பழனிச்சாமி அவர்களின் திருக்கரத்தால் வழங்கி சிறப்பித்ததை பாராட்டும் வண்ணம், உடுமலைப்பேட்டை 24 மனை தெலுங்கு செட்டியார்கள் மகாஜன சங்கம், அருள்மிகு காமாட்சியம்மன் திருக்கோவில் அறங்காவலர் குழு, உடுமலை 24 மனை தெலுங்கு செட்டியார்கள் இளைஞர் நற்பணி மன்றம், அண்ணா குடியிருப்பு குடியிருப்போர் நல சங்கம் போன்ற பல்வேறு அமைப்புகள் ஒருங்கிணைந்து பாராட்டு விழாவினை ஏற்பாடு செய்திருந்தனர்.

திருமதி. லீலாவதி சண்முகம், திருமதி. திவ்யா கோகுல் ஆகியோர் திருவிளக்கை ஏற்றுவைத்து விழாவுக்கு மங்கலம் சேர்த்தனர். தமிழ்தாய் வாழ்த்துடன் விழா துவங்கியது. V.K.ராஜ்ஆனந்த் தேவாரப் பாடல் பாடி அரங்கைப் பரவசப்படுத்தினார். உடுமலைப்பேட்டை அருள்மிகு காமாட்சி அம்மன் திருக்கோவில் அறங்காவலர் குழு தலைவர் C.N.ராமராஜ் அவர்கள், உடுமலை அண்ணா குடியிருப்பு குடியிருப்போர் நலச்சங்க செயலாளர் K.முத்துச்சாமி ஆகியோர் வரவேற்புரை நிகழ்த்தினார்கள்.

திருப்பூர் சுலோச்சனா தொழில் நிறுவனங்களின் மேலாண்மை இயக்குனர், எஸ். கிருஷ்ணகுமார் (கண்ணன்) அவர்கள் தலைமை தாங்கினார். தன்னுடைய தாயார் குலமுரசு பத்திரிக்கையை முழுவதுமாக வாசிக்கக்கூடியவர். எங்கள் குடும்பத்தில் உள்ள அனைவரும் துரைஅங்குசாமி அவர்களை நேசிப்பவர்களாக இருக்கிறோம். அவர் மிகச்சிறந்த பண்பாளர் என்று புகழாரம் சூட்டினார்.

கோவை மற்றும் திருப்பூர் அரசு சுற்றுலாத் துறை அலுவலர், திரு. அரவிந்த்குமார் அவர்கள் முன்னிலை வகித்தார். திரு. அரவிந்த்குமார் அவர்களின் துணைவியார், திருமதி.ஜெயந்தி அவர்கள் விழா நாயகரைப் பற்றி பேசும்போது, "ஒருவர் ஒரு துறையில் சாதிப்பதே பெரியது. ஆனால் எழுத்தாளர் - பேச்சாளர் - கவிஞர் - தொகுப்பாளர் - வர்ணனையாளர் எனப் பல துறைகளில் சாதித்தவர் என்றும், நம் இனத்தைச் சார்ந்த நாராயணகவி அவர்களைத் தொடர்ந்து தமிழ் கூறும் நல்லுலகில் துரை அங்குசாமி



அவர்களும் இடம் பெற்றிருப்பது மிகுந்த மகிழ்ச்சி" என்று ஒரு தேன்தமிழ் உரையை வழங்கினார்.

தமிழ்நாடு கால்நடை பராமரிப்புத்துறை அமைச்சர், தமிழ்நாடு அரசு கேபிள் டிவி நிறுவனங்களின் தலைவர் மாண்புமிகு உடுமலை K. ராதாகிருஷ்ணன் அவர்களின் சார்பாக அவருடைய சம்பந்தி பொள்ளாச்சி நகரமன்ற முன்னாள் துணைத் தலைவர் திரு. விஜயகுமார் அவர்கள் பொன்னாடை அணிவித்து, நம்மவர்களை நாடு போற்றுகிறவர்களாக அறிமுகம் செய்வதில், நாம் முன்னவர்களாக இருக்கிறோம் என்று பேசினார்.

கோவை கிஸ்கால் நிறுவனங்களின் மேலாண்மை இயக்குனர் டி.எஸ்.பி. கண்ணப்பன் அவர்கள் குலமுரசின் தொடர் வருகைக்கு அன்னாரை பாராட்டி மகிழ்ந்தார். நமது இனப் பத்திரிகையாக இருந்தாலும், இனத்திற்கு அப்பாலும் பலரும் விரும்பிப் படிக்கிற இதழாக மலர்ந்து இருப்பது துரைஅங்குசாமி அவர்களின் கைவண்ணமே என்றும், முன்னாள் அமைச்சர் பொங்கலூர் பழனிச்சாமி அவர்களே குலமுரசு பத்திரிக்கையை விரும்பிப் படிக்கக் கூடியவர் என்கின்ற சிறப்பை குறிப்பிட்டுப் பாராட்டி மகிழ்ந்தார். உடுமலை நாராயணகவிக்கு மணிமண்டபம் அமைக்கப்பட்டதைப் போல துரைஅங்குசாமி அவர்களுக்கு தமிழ்ச்செம்மல் விருது வழங்கப்பட்டது பாராட்டிற்குரியது என்று கூறி உரையாற்றினார்.

நமது 24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமைச் சங்கத் தலைவர் R.நடராஜன் அவர்கள் வாழ்த்துரை வழங்கும்பொழுது, நம் இன மாநாடுகளை முன்நின்று தொகுத்து வழங்கி, விழா மேடைக்கு தனித்துவம் பெற செய்து அனைவரின் பாராட்டையும் பெறக் கூடியவர் துரைஅங்குசாமி அவர்கள் எனப் பாராட்டி மகிழ்ந்தார். தலைமைச் சங்கத்தின் சார்பில் விழா மேடையில் இருந்த அனைவருக்கும் பொன்னாடை அணிவித்து பெருமைப்படுத்தினார்.

உடுமலை கே.ஜி. சண்முகம் அவர்கள் பேசும்போது, இவருக்கு இன்று கிடைத்திருக்கின்ற விருது - காலம் கடந்து கிடைத்திருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும். இருந்தாலும் தமிழக அரசுக்கும், நம்முடைய அமைச்சர் அவர்களுக்கும் நாம் நன்றி கூறுவதால் நமது சமூகமே பெருமைப்படுகிறது என்று சிறப்பித்தார்.

கோட்டூர் ஆசிரியர் M.R.நாச்சிமுத்து அவர்கள் பேசும்போது, "பெரிய தமிழ் அறிஞர்கள் குடும்பத்தில் பிறக்கா விட்டாலும், இன்றைக்கு







பலரும் பாராட்டுகின்ற நிலைக்கு உயர்ந்து இருக்கிறார் என்றால், அது இவருடைய தனித்திறமைக்கு கிடைத்த வெற்றி. எப்பொழுதெல்லாம் இவரை தொலைபேசியில் அழைத்தாலும், தமிழுக்கு அமுதென்று பேர் என்ற தமிழைப் போற்றும் நல்ல வரிகளை செவி சாய்க்க முடியும். அந்த வகையில் தமிழே இவருக்கு செம்மல் பட்டம் வழங்கி கவுரவித்து இருக்கிறது என்று போற்றினார்.

வாழ்த்துரைக்குப்பின் ஏற்புரை ஆற்றினார் தமிழ்ச்செம்மல் துரைஅங்குசாமி அவர்கள், "இந்த விருது அன்னை காமாட்சியின் அருட்பிரசாதம். காமாட்சி அன்னையின் முன்னிலையில், நீங்களெல்லாம் என்னைப் பாராட்டும்போது காமாட்சி அம்மனே மணி ஓசை அசைவில் என்னை ஆசீர்வதிப்பாராக உணர்கிறேன். விருது வழங்கிச் சிறப்பித்த தமிழக முதல்வர் அவர்களுக்கும், இந்த விருதுக்கு நான் தகுதி உடையவன் என்று எனக்கு நற்சான்றிதழ் வழங்கிய தமிழறிஞர் மூவருக்கும், என்னை குன்றத்தில் ஏற்றி சிறப்பிக்கும் நமது இன மக்கள் அனைவருக்கும், பெருமைமிகு நல்ல நண்பர்களுக்கும், என்னுடைய நன்றியை காணிக்கையாக்குகிறேன். என் தாயும், என் தந்தையும், என் மனைவியும் இந்தப் பொன்னான தருணத்தில் நினைவில் வைத்து மகிழ்கிறேன். தெலுங்கு பேசுகிற வகுப்பில் பிறந்திருந்தாலும் தமிழுக்கு புகழாரம் சூட்ட வாய்ப்பு நல்கிய தமிழன்னையின் பாதத்தை நீடு வணங்கி நிறைவு செய்கிறேன், என்று நா தழு தழுக்க நயம்பட உரைத்தார்.

தலைமைச் சங்க இணைச் செயலர் தெ.ஞானப்பிரகாசம், தலைமைச் சங்கப் பொறுப்பாளர்கள் திருப்பூர் V.சிவானந்தம், வைரம்குமார் ஆகியோர் விழாவில் பங்கேற்றனர்.

உடுமலை 24 மனை தெலுங்கு செட்டியார் மகாஜன சங்கத்தின் சார்பிலும், இளைஞர் நற்பணி மன்றத்தின் சார்பிலும், அண்ணா குடியிருப்போர் நலச்சங்கத்தின் சார்பிலும் பொன்னாடை அணிவித்து நினைவுப் பரிசுகள் வழங்கப்பட்டது.

நகரின் முக்கிய பிரமுகர்களும், ஸ்ரீவாரி லட்சுமிபதி, புலவர் சுபாஷ் சந்திரபோஸ், எழுத்தாளர் நடராஜன், கவிஞர் அமிர்தநேயன், மேடை பேச்சாளர் அப்துல்கலாம், எஸ்.எம். டிராவல்ஸ் நாகராஜன், சத்தியம் பாபு, செந்தில் பாலாஜி, வானொலி தங்கவேலு மற்றும் பலர் அன்னாரை வாழ்த்தி பொன்னாடையும், நினைவு பரிசும் வழங்கி சிறப்பித்தனர்.

மகாஜன சங்க செயலாளர் என்.எஸ். கோவிந்தராஜன் அவர்கள் நன்றி உரையாற்றினார். விழா நிகழ்ச்சிகளை R.V.S.ஆறுமுகம் மற்றும் பேராசிரியர் சிவக்குமார் ஆகியோர் தொகுத்து வழங்கினர்.

திருக்கோவில் செட்டுமை R.R.C.ராதா கிருஷ்ணன், P.மாரிமுத்து, N.S.கோவிந்தராஜன், ஆர்.வி.எஸ்.ஆறுமுகம், M.R.M.சௌந்தர்குமார், V.K.ராஜ்ஆனந்த், U.K.நந்தகுமார், M.S.V.கண்ணையன், Steps சபரி போன்றோர் விழா ஏற்பாடுகளை செய்திருந்தனர்.

நிறைவாக நாட்டுப்பண் பாடப்பட்டது. அனைவருக்கும் விருந்து நிகழ்ந்தது.

*செய்தித் தொகுப்பு:*
**R.V.S.ஆறுமுகம்,** உடுமலை.

*புகைப்படங்கள்:*
**சபரி,** ஸ்டெப்ஸ் போட்டோகிராபி, பொள்ளாச்சி



# ஸ்ரீ வீரமாத்தி அம்மன் குலதெய்வ வழிபாடு

ஈரோடு மாவட்டம் தளவாய் பேட்டையில் அமைந்துள்ள ஸ்ரீ வீரமாத்தி அம்மன் அறக்கட்டளைக்கு சொந்தமான வம்மையவர் கோத்திர குலதெய்வமாக வணங்கிவரும் ஸ்ரீ வீரமாத்தி அம்மன் திருக் கோயிலில் குலதெய்வ வழிபாடு 31ஆம் ஆண்டாக தை 1ம் நாள் 14.1.2021 வியாழக்கிழமையன்று நடைபெற்றது.

அன்று மாலை 6 மணிக்கு காவிரிக்கு சென்று தீர்த்தம் எடுத்து வந்து அம்மனுக்கு அபிஷேகம், சிறப்பு பூஜைகள் நடைபெற்றது. தொடர்ந்து மறுநாள் 15.1.2021 வெள்ளிக்கிழமை அதிகாலை 5 மணிக்கு மேளதாளங்கள் முழங்க காவிரியில் தீர்த்தம் எடுத்து வந்து பகல் 12 மணிக்கு அம்மனுக்கு சிறப்பு அலங்காரம் செய்யப்பட்டு பூஜைகள் நடைபெற்றன. மதியம் ஒரு மணிக்கு நமது சமூக எழிலரசி திருமண மண்டபத்தில் அன்னதானம் நடைபெற்றது. மாலை 5 மணிக்கு காவிரி ஆற்றில் முளைப்பாரி விடும் நிகழ்வுடன் நிகழ்ச்சி இனிதே நிறைவு பெற்றது.

24 மனை
செய்தித் துளிகள்

இந்நிகழ்ச்சியில் வம்மையவர் கோத்திர பங்காளிகள் அனைவரும் திரளாகக் கலந்து கொண்டு நிகழ்ச்சியை சிறப்பித்தனர். விழாவிற்கான ஏற்பாடுகளை ஸ்ரீ வீரமாத்தி அறக்கட்டளை நிர்வாகிகள் மிக சிறப்பாக செய்திருந்தனர்



# தளவாய்பேட்டையில் மும்முடியர் தைப்பொங்கல் குலதெய்வ வழிபாடு



மும்முடியவர் கோத்திரப் பங்காளிகள் குலதெய்வமான ஈரோடு மாவட்டம் தளவாய் பேட்டை ஸ்ரீ பாப்பாய் அம்மன் தைப்பொங்கல் குலதெய்வ வழிபாடு தை முதல் நாளன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது.

14.1.2021 வியாழக்கிழமை அன்று மாலை 5 மணிக்கு ஆற்றில் இருந்து தீர்த்தம் எடுத்து வந்து ஸ்ரீ பாப்பாய் அம்மனுக்கு அபிஷேகம் நடைபெற்றது. தொடர்ந்து இரவு 7 மணிக்கு அம்மனுக்கு சிறப்பு அலங்காரங்கள் செய்யப்பட்டு வழிபாடு நடைபெற்றது. விழாவிற்கு வந்திருந்த அனைவருக்கும் பிரசாதப் பையும், அன்னதானம் வழங்கப்பட்டது. இவ்விழாவில் 500க்கும் மேற்பட்டோர் கலந்து கொண்டு அம்மனை வழிபட்டனர். விழா ஏற்பாடுகளை தளவாய் பேட்டை 24 மனை தெலுங்கு செட்டியார்கள் சமூகத்தின் மும்முடியவர் கோத்திர குலதெய்வ பங்காளிகள், ஸ்ரீ பாப்பாய் அம்மன் வழிபாட்டு குழு, தைப்பொங்கல் விழா குழுவினர் மிகச் சிறப்பாக செய்திருந்தனர்.

– **அ.சுரேஷ்,** *குலமுரசு நிருபர்,*
*பள்ளிபாளையம்.*

# மகாப் பெரியவா தந்த மரிக்கொழுந்து



## மகாப் பெரியவரின் மகத்தான கருணை

கருணைக் கடலான மகாப் பெரியவாளை ஒவ்வொரு நாளும், பக்தர்கள் தரிசித்து, அவரது அருளாசி பெற்று, தங்களது வாழ்வில் நேரும் துன்பங்களைப் போக்கி வந்தனர். இந்த தரிசனத்தின் போது, பக்தர்களுக்கு மகா சுவாமிகள் கூறும் அருளாசியின் ஒவ்வொரு சொல்லும் ஆழமான கருத்துடையவை. தரிசிக்கும் பக்தர்களின் தற்போதைய நிலை என்ன என்பதையும் அவர் எதிர்கொள்ளப்போகும் பிரச்சனைகள் எவை எவை என்பதையும் துல்லியமாக ஞான திருஷ்டியில் உணர்ந்து அதற்கேற்ற பரிகாரத்தை மகா சுவாமிகள் கூறுவார். அவர் கூறும் அந்த சொல் பக்தனின் வாழ்வில் அற்புத நன்மையை விளைவிக்கும். இச்செவ்விய கருத்தை உணர்த்தும் ஒரு நிகழ்ச்சி...

மகாப் பெரியவாளைப் பார்க்க வரும் கூட்டம் பெரும்பாலும் நிரந்தரமானது. யார் யார் எங்கிருந்து வருகிறார்கள் என்பதையும் பெரியவா நன்றாகவே அறிந்து வைத்திருந்தார்.

அன்று கூட்டத்தில் ஒரு மூதாட்டி, பகவானின் அருட்கடாட்சத்துக்காக நின்று கொண்டிருந்தார் . சேவை முடிந்ததும் ஒரு தட்டில் சில பழங்களை வைத்து, அம்மையாரை எடுத்துக்கொள்ளச் சொல்கிறார்.

மிகவும் திருப்தியாகப் பழங்களை எடுத்துக்கொண்ட அந்த அம்மையார் பழத்தோடு சேர்ந்து வந்த மெல்லிய மரிக்கொழுந்து காம்பு ஒன்றை எடுத்துக் கீழே போட்டு விட்டு பழங்களை மட்டும் எடுத்துப் பையில் போட்டுக் கொண்டார்!

'அதையேன் கீழே போட்டுட்டே? அதுவும் உபயோகமாக இருக்கும்.எடுத்துக்கோ!' என்றார் மகான் சிரித்தவாறே. பெரியவா சொல்லிவிட்டாரே என்பதற்காக, அந்த அம்மையாரும் மரிக்கொழுந்துக் காம்பை எடுத்துத் தனது பையில் போட்டு பத்திரப்படுத்திக் கொண்டார்.

'ஏன் இதை பத்திரமாக எடுத்துக்கொண்டு போகச்சொன்னார்?' என்றெல்லாம் அந்த அம்மாள் அப்போது யோசிக்கவில்லை. மகானிடம் கேட்கவும் இல்லை.

தன் ஊருக்குப் போக அம்மையார் பஸ்ஸில் ஏறி அமர்ந்துவிட்டார். பஸ் புறப்பட்டதும் அப்படியொரு தூக்கம். அருகில் அமர்ந்து இருந்த பெண், தூங்கும் அம்மையாரின் பையிலிருந்த பணப்பையைத் திருடிக் கொண்டாள்.

கண்டக்டர் வந்தார்.டிக்கெட் எடுக்க வேண்டுமல்லவா? . குரல் கேட்டு விழித்தெழுந்த

முனைவர் துரை அங்குசாமி

அம்மையார்,பையில் பணப்பையைத் தேடினார். அது அங்கே இல்லை!

ஆனால் அந்த பர்ஸ் பக்கத்தில் இருந்த பெண்ணின் கையில் இருந்தது. 'அது என் பர்ஸ்!' என்று இந்த அம்மையார் பதற்றத்தில்கதற...'இல்லை, இல்லை...இது என்னுடையதுதான்!' என்று பக்கத்திலிருந்த பெண் சொல்ல, அங்கே களேபரம் ஆகிவிட்டது!

பர்ஸில் இவ்வளவு பணம்தான் இருக்கிறது என்று கச்சிதமாகச் சொல்கிறாள் எடுத்தவள். காரணம் பர்சைத் திருடியதும் பணத்தை எண்ணிப் பார்த்துவிட்டாள்.

பர்ஸின் நிஜ சொந்தக்காரியும் பணம் இவ்வளவுதான் இருக்கிறது என்று சொல்கிறாள். கண்டக்டரோ, யாரை நம்புவது என்று தெரியாமல் தத்தளிக்கிறார். அப்போதுதான் அந்த அம்மையாருக்குப் பெரியவா, மரிக்கொழுந்து காம்பைப் பத்திரமா எடுத்துக்கொண்டு போகச் சொன்னது 'பளிச்'சென்று ஞாபகத்துக்கு வந்தது.

'கண்டக்டர் சார்...அந்த பர்ஸில் வேறொரு பொருளும் இருக்கிறது. அது என்னவென்று இந்தப் பெண்ணைச் சொல்லச் சொல்லுங்கள்.

திருடியவளிடமிருந்து இதற்கு எப்படிப் பதில் வரும்?. 'நான் சொல்கிறேன்... மரிக்கொழுந்தின் சிறிய காம்பு ஒன்று உள்ளே இருக்கிறது. வாசனை உள்ளது. வேண்டுமானால் அந்த பர்ஸைத் திறந்து பாருங்கள்.. தெரியும்!' என்றார் அம்மையார்.

கண்டக்டர் புதியவளிடமிருந்து பர்ஸை வாங்கிப் பார்க்க.. உள்ளே, அந்த மரிக்கொழுந்து காம்பு பத்திரமாக இருந்திருக்கிறது.

பிறகென்ன -திருடியவள் தன் தவறை ஒப்புக்கொண்டாள். அம்மையாரின் வேண்டுகோளுக்கிணங்க அவள் மன்னித்து விடப்பட்டாள்.

காஞ்சி பெருங்கருணா மூர்த்தி , தன் பக்தர்களுக்கு இடர் வருவதை முன்கூட்டியே அறிந்தவர். இடர் தீர்க்கும் உபாயத்தை குறிப்பால் உணர்த்தி கவலை தீர்த்தவர் காஞ்சி மகாப் பெரியவா.. அதற்கான நிவர்த்தியுடன் அனுப்பும் அந்த மகானின் கருணை உள்ளத்தை எவ்வாறு அளவிட முடியும்

மனம் கலங்காது மகாப்பெரியவாவை மனதில் நினைத்தாலே போது பெருந்துயரமும் சுவடு தெரியாமல் காணமால் போய்விடும் . இது காஞ்சி தெய்வத்தின் கருணை. பலரின் அனுபவ சத்தியம் இது..

***- கருணை மழை தொடரும்***




சிவகாசியில் நடைபெற்ற மாநில அளவிலான 10 வயதுக்கு உட்பட்ட பெண்கள் ஒற்றையர் பிரிவில் நமது 24 மனை இனத்தைச் சேர்ந்த பழனி மகேந்திரன் சுகன்யா அவர்களின் மகள் ஜெய சப்த ஸ்ரீ தமிழக அளவில் முதலிடம் பெற்றார். அவருக்கு வாழ்த்துக்களையும் பாராட்டுக்களையும் குலமுரசு சார்பில் தெரிவித்துக் கொள்கிறோம்




# K.நடராஜன் அவர்களின் நூல் வெளியீட்டு விழா

## (16 வீடு - மாதளையவர் குலம்)

உடுமலையில் தனி வட்டாட்சியாளராகவும், பொள்ளாச்சி தாலுகா வட்டாட்சியராகவும் பணியாற்றி ஓய்வு பெற்ற உடுமலை K.நடராஜன் (மாதளையவர் குலம் - 16 வீடு) அவர்களின் 'அரண்மனைத் தோட்டம்' என்ற புனைவிலக்கிய நூலின் வெளியீட்டு விழா 31-01-2021 ஞாயிற்றுக்கிழமை காலை 10 மணியளவில் நேரு வீதி அருள்மிகு காமாட்சியம்மன் திருக்கோவில் வளாகத்தில் சிறப்பாக நடைபெற்றது.

தமிழ்த்தாய் வாழ்த்து இறைவணக்கப் பாடலுடன் விழாத் தொடங்கியது. மாவட்ட நூலக அலுவலர் (ஓய்வு), திரு. T.முத்துமணி அவர்கள் வரவேற்புரை வழங்கினார். ஸ்ரீ காமாட்சியம்மன் கோவில் தலைவர் திரு. C.N.ராமராஜ் அவர்கள் தலைமை வகித்து வாழ்த்துரை வழங்கினார்.

குலமுரசு பத்திரிகையின் ஆசிரியரும், தமிழக அரசின் தமிழ்ச்செம்மல் விருது பெற்ற முனைவர் திரு. துரை அங்குசாமி அவர்கள் 'அரண்மனைத் தோட்டம்' நூலை வெளியிட்டார்.

உடுமலை கிழக்கு அரிமா சங்கத் தலைவர் திரு. M.R.வர்ஷினி இளங்கோவன் அவர்கள் வெளியீடு செய்த நூலைப் பெற்றுக் கொண்டு வாழ்த்துரை வழங்கி, 'அண்ணா நீ வாழ்க' என்ற கவிதையைப் பாடி சிறப்பித்தார்.

சிறப்பு விருந்தினராக கோவை வேளாண்மைப் பல்கலைக் கழகத்தில டீன் ஆகப் பணியாற்றி ஓய்வு பெற்ற திரு. R.கணேசன் அவர்கள் விழாவில் கலந்து கொண்டு சிறப்பு செய்து வாழ்த்துரை வழங்கினார்.

உடுமலை நாராயணகவி முதல் இன்றுள்ள படைப்பிலக்கியவாதிகள் வரை நம் இனத்தவர் பலர் நூல்களை வெளியிட்டு ஆற்றிய இலக்கியச் சேவைகளைக் குறித்தும், K.நடராஜன் அவர்கள் எழுதிய 'பிரம்மன் எழுதிய எழுத்து', 'சாதனைப் பெண் பாரதி' என்ற நூலினையும் நினைவுபடுத்தி அருமையாக முனைவர் துரை அங்குசாமி அவர்கள் வாழ்த்துரை வழங்கினார்.

ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியர் திரு. சுபாஷ் சந்திரபோசு அவர்கள் நூலினை ஆய்வு செய்து வாழ்த்துரை வழங்கினார்.

தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்க மாவட்ட துணைச் செயலாளர் தோழன் ராசா அவர்கள் நூலுக்குப் பாராட்டுரை வழங்கினார்.



24 மனை தெலுங்கு செட்டியார் சமூக முக்கியஸ்தர் R.V.S. ஆறுமுகம் அவர்களும், சமூக செட்டுமை R.ராதாகிருஷ்ணன் அவர்களும், ஓய்வு பெற்ற பேராசிரியர் (பழனி) சோம. சிவசண்முகம் அவர்களும், உடுமலை கவிஞர், ஆசிரியை மஞ்சுளா தேவி அவர்களும், கோவை இந்தியன் மற்றும் பலரும் பொன்னாடை அணிவித்தனர். நூலாசிரியர் திரு. K.நடராஜன் அவர்கள் ஏற்புரை வழங்கினார்.

இலக்கியக் கலைஞர்களும், இனச் சான்றோர்களும் நிறைந்த இந்நூல் வெளியீட்டு விழா தேனீர் விருந்துடன் இனிதே நிறைவுற்றது.

*- செய்தித் தொகுப்பு:* ***P.எத்திராஜு***, 
*நெடுஞ்சாலைத்துறை.*

---



# பூர்விக கிராமத்தில் தைப்பூச திருவிழா

உடுமலை பிப்ரவரி 6 அன்று உடுமலைப்பேட்டை ராகல்பாவி கிராமத்தில் தைப்பூசம் திருவிழா நடைபெற்றது. மனித மனங்களைப் பிணைத்து நல்லுறவை ஏற்படுத்தும் மகோன்னத சக்தி வாய்ந்தவை விழாக்கள். துன்பத்தைக் களைப்பை மறந்து, புத்துணர்ச்சி ஊட்ட வல்லவை. அத்தகைய விழாக்களைக் கொண்டாடி மகிழ்ந்த கிராமத்து மக்கள் வாழ்வாதாரம் கருதி பல்வேறு நகர்ப்புறங்களுக்கு நகர்ந்துவிட்டாலும், குறிப்பிட்ட விழாக்களில் பங்கேற்று தங்கள் பழமையையும், பண்பாட்டையும், பூர்வீகத்தையும் போற்றி மகிழ்வர். அத்தகைய ஒரு திருவிழா ராகல்பாவி தைப்பூசத் திருவிழா.

முருக பக்தர்கள் தைப்பூச திருநாளில் சித்தர்களால் போற்றப்படுகின்ற தண்டமிழ் தெய்வம் தண்டாயுதபாணி சுவாமியின் திருவருளை வேண்டி விரதமிருந்து, சேவல் கொடி பிடித்து, காவடி எடுத்து, வேலேந்தி, வெற்றிவேல் முருகனுக்கு அரோகரா எனும் கோசத்துடன் பாத யாத்திரை மேற்கொள்ளுகிறார்கள். தைப்பூசத் திருநாளின் முக்கியத்துவத்தை உணர்ந்து தமிழக அரசும் பொது விடுமுறை அறிவித்து சிறப்பு செய்துள்ளது.

உடுமலைப்பேட்டை ராகல்பாவி கிராமத்தில் 24 மனை தெலுங்கு செட்டியார்கள் சமூகத்தினர் நூற்றாண்டுகளுக்கும் மேலாக தைப்பூச திருநாளை திருவிழாவாக கொண்டாடி மகிழ்கிறார்கள்.தொழில் காரணமாக பல்வேறு ஊர்களுக்கு இடம்பெயர்ந்து இருந்தாலும், இந்த ஆண்டு தைப்பூசத் திருநாள் அன்று பூர்வீக கிராமத்தில் 18 அடி உயரத்தில் மண்ணில் கோலப்பொடிகளால், தேர் வரைந்து, முருகப் பெருமானை தேரில் வைத்து - மாவிளக்கு பொங்கல் படையல் வைத்து சிறப்பாக வழிபட்டு மகிந்தனர். பிறகு கிராமிய பாடல்களைப் பாடி கும்மியடித்து தமிழ் மரபின் பாரம்பரியத்தை போற்றி இத்திருவிழா சிறப்பாக நடந்தேறியது.

*- செய்தித் தொகுப்பு:* 
**R.V.S.ஆறுமுகம், உடுமலை.**



தெய்வத்திரு. அருட்செல்வர். எம்.சண்முகம் செட்டியார்
திருமதி. குஞ்சம்மாள் சண்முகம்




SULOCHANA COTTON SPINNING MILLS PVT LTD

424, 426, Kamaraj Road, Tirupur - 641 604.

Phone : 0421-2211824 / 826 Fax : 0421-4321540

Web : www.sulochanamills.com / sales@sulochanamills.in

# வாசகர் குரல்

காஞ்சிபுரம் காமாட்சியம்மன் கோயிலில் நடந்த மகா சண்டி ஹோமம் பற்றிய செய்தித் தொகுப்பும் அட்டைப்படமும் அருமை. சண்டி ஹோமத்தை நேரடியாகவும் இணையதளத்தின் வழியாகவும் தரிசிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைக்கவில்லை. இருப்பினும் அக்குறையைப் போக்கும் வகையில் குலமுரசு சண்டி ஹோமத்தை சித்தரித்த விதம் அருமையாக அமைந்திருந்தது..

**– R.தர்மராஜன்,**
கேளம்பாக்கம், சென்னை.

காஞ்சி காமாட்சியம்மன் ஆலயத்தில் நடந்த சண்டி ஹோமத்தில் தன்வந்திரி ஹோமம் நடத்தப்பட்டதாக குலமுரசு வாயிலாக அறிந்து மகிழ்ந்தோம். கொரோனா நோய்த் தொற்றுள்ள காலகட்டத்தில் மக்கள் ஆரோக்யம் கருதி தன்வந்திரி ஹோமத்தை சண்டி ஹோமத்துடன் சேர்ந்து நடத்தியது மிகவும் பாராட்டத்தக்க ஒன்றாகும்..

**– கண்ணாயிரம் – தனலட்சுமி,**
**திருச்சி.**




சென்ற மாத இதழில் மருந்தியல் விஞ்ஞானி ஆனந்த்குமார் அவர்களின் பேட்டி கருத்து நிறைந்து. இளைஞர்களுக்கு அவர் தந்த அறிவுரை வழிகாட்டியாக மிகவும் பயனுள்ளது. தேசமே போற்றும் விஞ்ஞானியாக உயர்ந்த போதும் அவர் படிக்கின்ற காலத்தில் KCP ஐயா அவர்கள் செய்த இட உதவியை நன்றியோடு நினைவு கூர்ந்துள்ளது அவரது பண்பைக் காட்டுகிறது. குலமுரசுக்கு அவர் தந்த பாராட்டு 'பன்முக சிறப்பிதழ்' என்பது முற்றிலும் பொருத்தமானது.

**– R.செல்வக்குமார்,**
கேளம்பாக்கம், சென்னை.

குலமுரசு பத்திரிகையின் மணக்கோலம் பகுதி நம் இனமக்களுக்கு பெரிதும் உதவிகரமாக உள்ளது. திருமண புரோக்கர்கள் - பணத்தை மறைமுகமாக வசூலிக்கும் திருமண அமைப்புகளிடமிருந்து பெற்றோர்களைக் காப்பாற்றுகிறது. குலமுரசு மணக்கோலம் பகுதி மூலமாக திருமணம் நடந்த மணமக்களின் படங்களை வெளியிடுகிறீர்கள். டிசம்பர் மாத இதழில் ஜோடிகள், ஜனவரி இதழில் 2 ஜோடிகள் படத்தை வெளியிட்டுள்ளீர்கள். மணவரன் தேடுவோருக்கு உதவும் குலமுரசுக்கு வணக்கங்கள்.

**– R.S.கோவிந்தராஜ்,** பசுமலை,
மதுரை.

கடந்த மாத குலமுரசில் வெளிவந்த ஆரோக்கியத்திற்கான கட்டுரை ஏன் ரசித்து ருசித்து சாப்பிடவேண்டும் என்பது அருமையான கட்டுரை. பாராட்டுக்கள்.

**– மனோரஞ்சிதம் சிவானந்தம்,**
சேலம்.

மாதம் தோறும் மகாப் பெரியவாளின் அருளாற்றல் அற்புதத்தை விளக்கும் கட்டுரைகளை குலமுரசில் வெளியிடுவது மிகப்புண்ணியமான காரியம். இப்புண்ணியத்தால் குலமுரசு மேலும் மேலும் வளரும்.

**– ம.இராமனாதன்,** திருநெல்வேலி.

தைமாதத்தை முன்னிட்டு கவியரசு கண்ணதாசனின் தைப்பாவை கவிதையை வெளியிட்டிருந்தீர்கள். கவியரசின் தேன் சிந்தும் வரிகளைச் சுவைத்து மகிழ்ந்தேன்.

**– ம.கூத்தரசன் (நடராசன்),**
திருவண்ணாமலை.



# மங்கள வாழ்வு தரும்
# மாசி மாதம்

'மகம் ஜெகம் ஆளும்' என்பது பழமொழி. சிம்ம ராசியைச் சேர்ந்த இந்த நட்சத்திரத்தின் ராசி அதிபதி சூரியன் என்பதால், இந்த நட்சத்திரத்திற்கு ஆளுமை தன்மை அதிகம்.

மகம் என்பது கேதுவின் நட்சத்திரம். ஒரு ஆன்மாவை லௌகீகத்திற்கு அழைப்பது ராகு என்றால், மோட்சம் கொடுப்பது கேதுவே. மோட்சகாரகன் எனப்படும் கேதுவின் மகம் நட்சத்திரத்தில், சந்திரன் சஞ்சாரம் செய்கிற வல்லமை மிக்க நாளிது.

கால புருஷ 5-ம் அதிபதி சூரியன் வீட்டில் சந்திரன். 5-ம் இடம் என்பது பூர்வ புண்ணிய ஸ்தானம். சூரியன் ஆன்மா, சந்திரன் உடல். சந்திரன் புனித நீருக்கு அதிபதி. ராஜகிரகமான சூரியன் தன் வீட்டை தானே பார்ப்பதால், மகம் நட்சத்திரத்தில் சந்திரன் சஞ்சரிக்கும் போது சூரியன், சந்திரன், கேதுவின் தொடர்பு ஒவ்வொரு ஜீவாத்மாவின் கர்ம வினையை போக்குவதில் நிகரற்ற சக்தி படைத்த நாளாக மாசிமகம் திகழ்கிறது.

அதாவது ஆன்மா என்ற சூரியனின் பார்வை பெறும் சந்திரனின் மகம் நட்சத்திரம், ஆன்மாவையும், உடலையும் பரிசுத்தம் அடையச்செய்யும். அதன் மூலம் கர்ம வினைப் பதிவு குறையும். இந்த ஆத்ம சுத்தியானது, சூரியன், சந்திரனின் தொடர்பு எப்பொழுது சிம்மத்திற்கு கிடைக்கிறதோ அப்பொழுது மட்டுமே சாத்தியம்.

இப்படி பல சிறப்புகள் பெற்ற நட்சத்திரம் மகம் ஆகும். மகமும் பவுர்ணமியும் இணையும் மாசி மகம் வருடத்திற்கு ஒரு முறையே வருகிறது. பவுர்ணமி அன்று நிலவு முழுமையான தோற்றம் பெற்று சந்திரனின் முழு சக்தியும் உடையதாய்

திகழ்கிறது. இது மக்களுக்கு வளமும் நலனும் அளிக்கக்கூடிய நாளாகும். இதனால் இந்நாள் சிறப்பான நாளாக இருக்கிறது.

சூரியனின் அதிதேவதை பரமேஸ்வரன். சந்திரனின் அதிதேவதை பார்வதிதேவி. ஆண் கிரக ராசியில் வரும் பெண் கிரகமான சந்திரன். பெண் கிரக ராசியில் வரும் ஆண் கிரகமான சூரியன். இதுதான் மாசி மக பவுர்ணமி நாளின் சிறப்பு அம்சம்.

எனவே இந்த நாட்களில் சிவனுக்குள் சக்தி ஐக்கியம், சக்திக்குள் சிவன் ஐக்கியம். சிவ சக்தி ஐக்கிய ஸ்வரூபத்தை வணங்க இருவரின் அருளும் ஒருங்கே கிடைக்கும். இந்த பவுர்ணமியில் பார்வதி - பரமேஸ்வரரை வழிபட திருமணத் தடை நீங்கும். பிரிந்த தம்பதிகள் மீண்டும் சேர்ந்து வாழ்வார்கள். தம்பதியின் ஒற்றுமை பெருகும். குடும்பத்தில் இன்பம் பெருகும்.

சிவபெருமான் வருண பகவானிற்கு சாப விமோசனம் தந்த நாள் மாசிமகம் என்பதால், அன்று சிவபெருமானை வணங்க சாப விமோசனம் கிடைக்கும்.

பார்வதி தேவியார் மாசி மாதம் மக நட்சத்திரத்தில்தான் தட்சனின் மகள் தாட்சாயணியாக அவதரித்தார். எனவே அன்றைய தினம் சக்தி வழிபாடு மற்றும் பெண்களுக்குரிய விரத தினமாகவும் போற்றப்படுகிறது.

தந்தையான ஈசனுக்கு, முருகன் மந்திர உபதேசம் செய்த நாளும் மாசி மகம்தான். எனவே மந்திர உபதேசம் பெற, உபநயனம் செய்ய, கலைகளில் தேர்ச்சி பெற, புதிய கலைகளைக் கற்க இம்மாதம் சிறப்பு வாய்ந்தது. உயர் படிப்பு படிக்க விரும்புபவர்கள், ஆராய்ச்சி செய்ய விரும்புபவர்கள் மாசி மக நாளில் அவற்றைத் தொடங்கினால் அதில் சிறந்து விளங்கலாம்.

பாதாளத்தில் இருந்த பூமியை, பெருமாள் வராக அவதாரம் எடுத்து வெளிக்கொணர்ந்த நாளும் மாசி மகம்தான். இதனால் இந்நாள் ஸ்ரீ மகாவிஷ்ணு வழிபாட்டிற்கும் சிறந்த நாளாக அமைகிறது.

மாசி மகம் அன்று சிவபெருமானையும், ஸ்ரீவிஷ்ணு பகவானையும், பித்ருக்களையும் வணங்கினால் சகல நலன்களையும் பெற்று வளமான வாழ்க்கை அமையும்.

சிவன், விஷ்ணு, முருகன் என முப்பெரும் தெய்வங்களுக்கு உகந்த இந்த நன்னாள், தோஷம் நீக்கும் புண்ணிய நாளாக கருதப்படுகிறது. இந்நாளில் புண்ணிய ஸ்தலங்களை தரிசிப்பதும், புண்ணிய நதிகள், தீர்த்தங்களில் நீராடுவதும் பாவங்களை போக்கும் என்பது ஐதீகம்.

மகம் நட்சத்திரத்தின் அதிதேவதை பித்ருக்கள். ஆகையால் அன்றைய தினம் பித்ருக்கள் வழிபாடு



செய்ய முன்னோர்களின் ஆசி கிடைக்கும். கும்பகோணம், ராமேஸ்வரம் போன்ற இடங்களில் தர்ப்பணம், பிதுர் கடன் செய்வது நன்மை தரும்.

இந்த தினத்தில் பல கோவில்களில் உற்சவ மூர்த்தியுடன் மக்களும் நீர்நிலைகளில் மூழ்கி வழிபாடு நடத்தும் தீர்த்தவாரி நடைபெறும்.

புனித நீராட்டு மற்றும் வழிபாட்டுடன் சில தான தர்மங்களையும் செய்வதால் பாவங்கள் நீங்கி அனைத்து வளங்களும் கிடைக்கப் பெறுவது உறுதி. அன்னதானத்தின் பெருமைகளை உணர்த்துவது தான் மாசி மகம் என்பதால், இயன்ற வரை அன்னதானம் செய்தால், கோடி புண்ணியம் வந்து சேரும்.

உடுமலை,
வாத்தியார் நாராயணகவி தவழ்ந்த மண்.
கல்வி ஆன்மீகம் அரசியல் வணிகம் என
பல்வேறு தளங்களில்
தன் சுய அடையாளத்தை இழக்காத மண்
திருமூர்த்தி மலையின் ஆராதனையும்
அமராவதியின் ஆலாபனையும்
உயர் உடுமலையின் பெருமைக்கு
உரை எழுதிக்கொண்டுள்ளது
அந்த மண் தந்த பொன்னாபரணம்
முனைவர் துரை அங்குசாமி

தலைமைச்செயலகத்திற்கு தமிழாய்ந்த
தலைமகன் ஒருவர் முகவரி
தாமதமாகவே தெரிந்திருக்கிறது
நல்லவேளை தவிர்க்கவில்லை

விருது பெறும் என் ஆசானை
பிச்சிப்பூ மாலை சூட்டி மெச்சுகிறேன்.
கொரோனா ஊரடங்கால் மாநிலமே
முடங்கிய நிலையில்
அடங்கிக் கிடந்த அன்றாடம் காய்ச்சிகள்
அரசு அறிவித்த அதிக பட்ச தளர்வுகளை
அறிந்து ஆனந்தம் அடைந்ததைப்போல
நானும் பரவசத்தின் உச்சத்தில்.

இத்தருணத்தில் சிலவற்றை பகிராமல் போனால்
என் தாய்மொழியே என்னை சபிக்கும்.

ஒட்டுமொத்த செட்டி மக்களின்
கொட்டு முரசு நம் குலமுரசு - இன்று
கெட்டிமேளம் கொட்டி இலக்கிய இதழாக
ஆன்மீக அணிவகுப்பாக வலம்வர என் ஆசானின்
செம்மொழிப் புலமையல்லவா துணை நின்றது.

இவருடன் எனக்கு கால் நூற்றாண்டு பந்தம்
கற்கண்டு சொந்தம்
சிரிப்பில் சிக்கனம் சிந்தனையில் தாராளம் - எதையும்
அழகுபட உரைக்கும் அகத்திய சொல்லோவியம்
இவரது மேடைப்பேச்சும்
நிகழ்ச்சித் தொகுப்பு முறையும் எழுத்து வடிவமும்
தாழைமடலில் தாமரைத் தண்டால் எழுதிய தமிழ்க்கவிதை
போல் இனிக்கும்.

காருகுறிச்சியின் நாதஸ்வர ஓசையில்
அபூர்வ ராகமான மகதியில் பாடல் கேட்கும் சுகம்
இவரது தமிழ்ப் பேச்சு
சில நேரங்களில் திரைப் பாடல்களில்கூட
குறைந்த அளவே இடம் பெற்ற
திலங் ராகத்தைப்போல தொனி கூடியிருக்கும் - அதிலும்
கவிதைச்சுவை கூடியே இருக்கும்.



# தமிழ்ச்செம்மல் விருதுபெற்ற என் ஆசானுக்கு அமிழ்தினிய என் வாழ்த்துப்பா!







இவர் எழுத்தில் வெளிவந்த 24 மனையர் வரலாறும்,
தென் கொங்கு நாடும், பல்லவர் தலைநகரப் பதிவுகளும்
காலம் கடந்தும் இவர் புகழ் பேசும்.
தமிழறிந்த பலரோடும் இவருக்கு சிநேகம் அவர்களுடன்
இவர் இடம் பெற்ற சொல்லரங்கங்களும் அநேகம்
கவிதையின் காதலர் - ஒய்யார உரைநடையை ஆள்பவர்

கவிதை ஈடுபாட்டில் இவருக்கு பிடிவாதம் அதிகம்
சுதி மாறாமல் தாளகதி மாறாமல்' தமிழ் கச்சேரி செய்பவர்
வாய்ப்பிருந்தும் அதிகாரம் செலுத்தாதவர் - அதனால்தான்
சிலப்பதிகார மாதவி போல தனித்தே தெரிகிறார்.
புதிய தொழில் நுட்ப வித்தகங்களின் விலாசம்

வாசிப்பு பழக்கம் அனைவருக்கும் வாய்ப்பதில்லை இவரது
சுவாசிப்பே வாசிப்பதில்தான் இருக்கிறது - ஆசானின் தமிழ்
விசுவாசம்தான் - உடுமலை விலாசத்தை உலகறியச் செய்திருக்கிறது
எப்பகுதியும் இனிக்கும் முக்கனி போல இவரது சுபாவம்

இவருக்கு ஓஷோவையும் தெரியும் ரூசோவையும் தெரியும்
கலீல் ஜிப்ரானையும் தெரியும் கண்ணதாசனையும் தெரியும்
அடியாரையும் தெரியும் குன்றக்குடி அடிகளாரையும் தெரியும்
சுகி சிவமும் தெரியும் சுப்ரமணிய பாரதியும் தெரியும்
அர்த்தசாஸ்திரமும் ஆகமவிதிகளும், ஆத்திச்சூடியும்
இவருக்கு அத்துபடி

அநேகருக்கு ஆரூர் பிடிக்கும் பிறந்தால் முக்தி என்பதால்
பலருக்கு பேரூர் பிடிக்கும் மேலைச் சிதம்பரம் என்பதால்
நம்மவர் பலருக்கு அரூரும் பிடிக்கும்
பூக்கள் விளையும் பூமி என்பதால்
இவருக்கு பிடித்தது கரூர் - மற்றும் திண்டுக்கல்
காரணம் பலப்பல.

வில்லிப்புத்தூர் கோபுரம்
தஞ்சைக் கழனியின் நெற்கதிர்கள்
கொங்கு மண்டலத்தின் வட்டார வழக்கு மொழி
கரிசல் காட்டின் மண்ணின் மகிமை
வேகவதி பாய்ந்த காஞ்சிபுரத்தின் புனிதம்
உத்திரமேரூர் கல்வெட்டு ஆவணம் போல் - இவர்
அறுநான்கு மனையரின் அடையாளம்

தடம் புரளாத தலைமைப் பண்பாளரான
இவருக்கு அடையாள அங்கீகாரம் சற்று தாமதம்தான்
இவரது பேசும் நாவும் பேனாவும் சிந்திய முத்துக்களை
சேகரித்து சேமித்து வைக்க வேண்டும். - அதுதான்
நம் இன தலைமுறைக்கு நாம் தரும் சீதனம்.
வாழ்த்த வயது தடை என்பதில் உடன்பாடில்லை எனக்கு.
நெஞ்சார சஞ்சாரம் செய்யும் என் ஆசானை வாழ்த்துகிறேன்.



**கவிஞர்**
**பஞ்சம் மணியன்,**
**சுண்டக்காமுத்தூர்.**
**(16 வீடு)**




# பெரிய நெகமம் அருள்தரும் ஸ்ரீ அங்காளம்மன் திருக்கோவில் மஹா கும்பாபிஷேக விழா







கோவை மாவட்டம் பெரிய நெகமத்தில் நெகமம் வம்சாவளி 24 மனை தெலுங்கு செட்டியார் சொப்பியர் குல மக்களின் குலதெய்வம் அருள்தரும் ஸ்ரீ அங்காளம்மன் திருக்கோவில் புனராவர்த்தன அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேக விழா 8-02-2021 திங்கட்கிழமையன்று காலை 9:30 மணியளவில் நடைபெற்றது.

முன்னதாக 4-02-2021 வியாழக்கிழமையன்று காலை 9 மணிக்கு விநாயகர் வழிபாடு. புண்யாஹம், யஜமான அனுக்ஞை, தேவதா அனுக்ஞை, தீபாராதனை, தீர்த்தம் எடுத்து வருதல் ஆகிய நிகழ்வுகளுடன் விழா தொடங்கியது.



5-02-2021 வெள்ளிக்கிழமை காலை 9 மணியளவில் கணபதி ஹோமம், மஹாலட்சுமி ஹோமம், நவக்கிரஹ ஹோமம், பூர்ணாஹுதி, தீபாரதனையும், அன்று மாலை 5 மணியளவில் வாஸ்து சாந்தி, பிரவேச பலி நடைபெற்றன.

6-02-2021 சனிக்கிழமை காலை 9 மணியளவில் மிருச்சங்கிரஹனம், அக்னி சங்கிரஹனம், தீபாராதனை நடைபெற்றது. மாலை 5 மணியளவில் முதற்கால யாக பூஜைகள் தொடங்கி நடைபெற்றன.

7-02-2021 ஞாயிற்றுக்கிழமை காலை 9 மணியளவில் இரண்டாம் கால யாக பூஜைகளும், மாலை 6 மணியளவில் மூன்றாம் கால யாக பூஜைகளும் அதனைத் தொடர்ந்து யந்திர





ஸ்தாபனம், அஷ்டபந்த மருந்து சாத்துதல் ஆகிய நிகழ்வுகள் நடைபெற்றன.

8-02-2021 திங்கட்கிழமை காலை 6 மணியளவில் நான்காம் கால யாக பூஜைகள் நடைபெற்று காலை 9 மணியளவில் கலசங்கள் புறப்பட்டு 9:45 மணியளவில் ஸ்ரீ அங்காளம்மன் விமானம் மஹா கும்பாபிஷேகமும் அதனைத் தொடர்ந்து 10 மணிக்கு ஸ்ரீ அங்காளம்மன் மூலஸ்தானம் மற்றும் பரிவார மூர்த்திக்கு மஹா கும்பாபிஷேகம் நடைபெற்றது. அதனைத் தொடர்ந்து மஹா அபிஷேகம், தச தரிசனம், அலங்காலம், மஹா தீபாராதனை காட்டப்பட்டு பிரசாதம் வழங்கப்பட்டது.

கும்பாபிஷேகத்தைக் காண வந்த அனைவருக்கும் அன்னதானம் வழங்கப்பட்டது. விழாவைக் காண நெகமம் வம்சாவழி சொப்பியர் குலமக்களும் உறவினர்களும் திரளாக வந்திருந்தனர். விழா ஏற்பாடுகளை விழாக் குழுவினர் சிறப்பாகச் செய்திருந்தனர்.

- **V.சிவானந்தம்,** *திருப்பூர்.*






* தமிழ் தேசிய மொழியாக உள்ள நாடுகள் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர்.
* உலகின் பெரிய கடல் ஏரி காஸ்பியன் கடல்.
* ஐ.நா சபையின் முதல் செயலர் டிபிக்யூலி.
* இந்து பல்கலைக் கழகத்தை அமைத்தவர் மாண்டவ் சிங் மாளவியா.
* டெஸ்ட் கிரிக்கெட்டில் 3000 ரன்களை இளவயதில் எடுத்தவர் டெண்டுல்கர்.
* உலகின் முதல் கருத்தடை மாத்திரையின் பெயர் ஈனோவிட்.
* உலகிலேயே மிக அதிகமாக சைக்கிள் ஓட்டுபவர்கள் சீனர்கள்.
* உலகிலேயே மிகச்சிறிய குரங்கு இனத்தின் பெயர் 'அலொசிபஸ்டிரிகொடிஸ்'
* எண்பது கிராம் எடையுள்ள இந்த குரங்கினம் மடகாஸ்கர் பகுதியில் காணப்படுகிறது.
* உலகில் மின்னல் தாக்கி அதிகம் இறக்கும் மக்கள் அமெரிக்கர்கள்.
* இறக்கையில்லாத பூச்சிகளுக்கு ஆப்டாஸ் பூச்சிகள் என்று பெயர்.
* ஷெர்லாக் ஹோம்ஸ் என்ற கதாப்பாத்திரம் தோன்றி 121 ஆண்டுகள் ஆகின்றன.
* யானை ஏறக்குறைய 30 வயதில் இனப்பெருக்க பருவத்தை எட்டுகிறது. இதன் கற்ப காலம் 22 மாதங்களாகும்.
* கண்தானத்தில் கருப்பு விழிகள் மட்டுமே அடுத்தவருக்கு பொருத்தப்படுகிறது.
* உலகில் முதன் முதலில் சர்க்கஸ்ரோமன் நாட்டில் தோன்றியது.
* உலகில் முதலில் குடையை பயன்படுத்தியவர்கள் சீனர்கள்.

# மணக்கோலம்

## கட்டணமில்லாத இலவச சேவை

1. 24 மனை குலமுரசின் மணக்கோலம் பகுதி வெளிப்படையானது. வரன் வேண்டுவோர் பயன்பாட்டிற்கான இலவசச் சேவை இது. வணிக நோக்குடையவர்கள் - இடைத்தரகர்கள் எந்த நிலையிலும் மணக்கோலம் பகுதியைப் பயன்படுத்தக் கூடாது.
2. மணக்கோலம் பகுதிக்கு விண்ணப்பிப்பவர்கள் குலமுரசு சந்தா தாரர்களாக வேண்டும்.
3. வரன் தகவல்கள் 3 மாத இதழ்களில் மட்டுமே வெளியிடப்படும். ஏராளமானவர்கள் விண்ணப்பம் செய்வதால் தொடர்ந்து வெளியிட இயலவில்லை. 3 மாதங்களுக்குப் பிறகு மீண்டும் விண்ணப்பம் தந்தால் மறுபடியும் 3 மாதங்களுக்கு வெளியிடப்படும்.
4. வரன்களுக்கு திருமணம் நிச்சயமாகிவிட்டால் உடனடியாகத் தெரிவிக்க வேண்டும்.
5. மணக்கோல விண்ணப்ப மாதிரிப் படிவம்

1. பெயர் ........................................................
2. படிப்பு ........................................................
3. பணி .................	4.வருமானம் ...........
5. வீடு 8 / 16	6. குலம் .................
7. பிறந்தநாள் ......................................
8. ராசி. .................... 9.நட்சத்திரம்.........
10. பெற்றோர் பெயர் ...........................
11. ஊர் ..... ............................................
12. தொலைபேசி எண்: .........................

மேற்கண்ட அனைத்துத் தகவல்களுடன் குலமுரசுக்கு சந்தா செலுத்தியதற்கான DD அல்லது செலானையும் ஸ்கேன் செய்து

**manakolam24@gmail.com**

என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பிவைக்கவும்.

# 24 மனை குலமுரசு

## ஆண்டு சந்தா ரூ. 200/- மட்டுமே

## சந்தா செலுத்துவது எப்படி?

Account Name : 24 MANAI KULAMURASU
Bank Name : CANARA BANK
Branch : CHENNAI KILPAK
Account Number : SB. A/c. 1650101014869
IFSC CODE : CNRB0001650

மேற்கண்ட வங்கிக் கணக்கில் ஆன்லைன் மூலம் ரூ.200/- செலுத்தி அதன் பரிவர்த்தனை விபர ஸ்கிரீன்ஷாட்-ஐ **9965 900 990** என்ற வாட்ஸ்அப் (அ) kulamurasuoffice@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு உங்கள் முகவரி மற்றும் செல்போன் எண் குறிப்பிட்டு அனுப்பவும்.

கனரா வங்கியில் செலான் மூலம் பணமாக செலுத்துவோர் சந்தா ரூ.200 + வங்கி சேவைக் கட்டணம்+ GSTவரி ரூ.60 சேர்த்து ரூ.260/-ஐ கனரா வங்கிக் கணக்கில் செலுத்தி, கௌண்டர் ஃபைல் ரசீது நகலுடன் உங்கள் முகவரி எழுதி மின்னஞ்சல் (அ) வாட்ஸ்அப் (அ) தபாலில் அனுப்பவும்.

24 மனை குலமுரசு,
330/1, சின்னாண்டான் கோவில் வீதி,
கரூர் - 639001.
**Customer Care Cell: 9965 900 990**

- பிரதி மாதம் 1-ஆம் தேதி வரை வரும் கடிதங்களுக்கு அந்த மாதத்திலிருந்து குலமுரசு அனுப்பிவைக்கப்படும்.
- பிரதி மாதம் 2-ஆம் தேதிக்கு மேல் வரும் கடிதங்களுக்கு அடுத்த மாதத்திலிருந்து குலமுரசு அனுப்பி வைக்கப்படும்.
- குலமுரசு சந்தா பெறப்பட்டவுடன் உங்களுக்கென்று ஒரு ID எண் உங்கள் செல்போனுக்கு SMS மூலம் தெரிவிக்கப்படும்.

## குலமுரசு வரவில்லையா?

உங்கள் ID எண் குறிப்பிட்டு **9965 900 990** என்ற தொலைபேசி எண்ணுக்கு தகவல் தெரிவிக்கவும். அல்லது kulamurasuoffice@gmail.com - என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பவும்.




# செந்தில்குமார்
## டெக்ஸ்டைல்ஸ்

*The Family Shop*

*Ultimate Designs...*

*Updated Collections...*



சுபமுகூர்த்தப் பட்டுகள்

சொந்தமும், பந்தமும் சூழ்ந்து
வாழ்த்தொலிக்கும் சுபமுகூர்த்த
வேளைகளில் பாரம்பரியமும், பண்பாடும்,
நாகரீகமும் பளிச்சிட வைக்கும்
நேர்த்தியான வண்ணங்களில்
பெண்மைக்குப் பெருமிதம் தரும்
பட்டு ரகங்களுக்கு

*உங்கள்*

# செந்தில்குமார்
## டெக்ஸ்டைல்ஸ்

**S.K. டவர்ஸ், சித்த வீரப்பசெட்டி தெரு,**
**தருமபுரி. ✆ 04342 - 267582**

உ

ஸ்ரீ காமாட்சி அம்மன் துணை





24 மனை தெலுங்கு செட்டியார்கள்
தெலுங்குபட்டி செட்டி, சாது செட்டி
சமுதாய பெருமக்கள் அனைவரும்,
எல்லா வளமும், நலமும் பெற்று
நிறை செல்வங்களுடன்,
நீண்ட ஆயுளுடனும் வாழ்வாங்கு வாழ
உலகளந்த மகாவிஷ்ணு,
அன்னை காமாட்சி தாயை
வேண்டி வணங்குகிறேன்.





என்றும் உங்கள் பாசத்துடன்:

தலைமை
சங்கத் தலைவர் **ரெ. நடராஜன்**

**24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமைச் சங்கம்**

155, ஈ.வே.ரா.பெரியார் நெடுஞ்சாலை,
கீழ்ப்பாக்கம், சென்னை - 600 010.










## மணக்கோலம் வாசகர்கள் கவனத்திற்கு

★ மணக்கோலம் பகுதி வெளிப்படையானது. நம் இனமக்கள் வரன் தகவல்களைப் பகிர்ந்து கொள்ள உதவும் இலவச சேவைப் பகுதி. இது விளம்பரம் அல்ல. இதற்கு தனியாகக் கட்டணம் கிடையாது.

★ மணக்கோலம் பகுதியில் வரன் விபரம் வெளியிட 24 மனை குலமுரசு இதழுக்கு ஆண்டு சந்தாதாரராக இருக்கவேண்டும் என்பது மட்டுமே விதிமுறை.

★ இப்பகுதியில் வரன் பற்றிய தகவல்கள் மூன்று மாத இதழ்களில் தொடர்ந்து வெளியிடப்படும். மூன்று மாதங்களில் வரன் அமையாதவர்கள் மீண்டும் மூன்று மாதங்கள் மறுபிரசுரம் செய்து கொள்ளலாம். இம்முறையில் ஆண்டு சந்தா நிறைவடையும் காலம் வரை ஒருவர் நான்கு முறை மறுபிரசுரம் செய்து கொள்ளலாம்.

★ மணக்கோலம் பகுதியில் மறுபிரசும் செய்ய, விபரம் சேர்க்க, சந்தா விபரம் அறிய 9965900990 என்ற செல்பேசி எண்ணிற்கு தொடர்பு கொள்ளவும் அல்லது manakolam24@gmail.com என்ற மின்னஞ்சலில் தெரிவிக்கவும்.

★ வரன்களுக்குத் திருமணம் உறுதிசெய்யப்பட்டால் சேவை மைய எண்ணில் தொடர்பு கொண்டு வரன் தகவலை நீக்கிக் கொள்ளலாம்.

★ மணக்கோலம் மூலமாக வரன் அமைந்தவர்கள் திருமணப் படத்தை குலமுரசில் வெளியிட விபரங்களுடன் அனுப்பிவைத்தால், வெளியிடப்படும்

★ ஒவ்வொரு மாதமும் 5ம் தேதிக்கு முன்பு வரும் வரன் தகவல்கள் மட்டுமே அம்மாத இதழில் இடம்பெறும். அதற்குப்பின் வருபவை அதற்கடுத்த இதழில் இடம்பெறும்.

★ இப்பகுதியில் வெளியாகும் வரன் விபரங்களுக்கு வெளியிடும் குடும்பத்தாரே முழுப்பொறுப்பு. மணமகன் அல்லது மணமகள் குறித்த விபரங்களை சம்பந்தப்பட்ட குடும்பத்தாரே தொடர்பு கொண்டு விசாரித்து தங்களுடைய சொந்தப் பொறுப்பில் திருமணங்களை உறுதி செய்துகொள்ளவும்.

★ வணிக நோக்கமுடையவர்கள் - இடைத்தரகர்கள் எந்த நிலையிலும் மணக்கோலம் பகுதியைப் பயன்படுத்தி பணம் வசூலிப்பதோ - நகல் எடுத்து விற்பனை செய்வதோ - வேறு வழிகளில் பயன்படுத்துவதோ கூடாது.

★ 24 மனை குலமுரசு இதழுக்கு தபால், மின்னஞ்சல் மற்றும் வாட்ஸ்அப் மூலமாக வரும் வரன் விபரங்களை நாங்கள் எவருடனும் பகிர்ந்து கொள்வதில்லை. வேறு தளங்களிலும் நாங்கள் வெளியிடுவதில்லை.






# KANTHASAMY METAL ROLLING MILLS

**Manufacturers of : ALUMINIUM SHEETS, CIRCLES & VESSELS**

5/432-A, Kuppiyode, Maruharoad, PALAKKAD - 678 007.
E-mail: kanthaswamypalakkad@gmail.com
Phone: 0491-2572886, Mobile: 98430 54999

# RADHA METAL INDUSTRIES

**Manufacturers & Dealers in ALUMINIUM VESSELS & CIRCLES**

11/1434, Market Road, PALAKKAD - 14. Kerala.
E-mail: radhametalpalakkad@gmail.com
Phone: 2500610, 2502578, Mobile: 9447100891

**K.ராஜமன்னார் - R.மகாலட்சுமி மற்றும் குடும்பத்தார்,**

83, சர் சண்முகம் ரோடு, கோயம்புத்தூர் - 641002.

# அவசியமற்ற அக்கறைகள்

உலகில் பலர் சொல்லப்பட்ட வார்த்தைகளை மட்டுமே கேட்கும் காதுகளைப் பெற்றவர்கள். வெகு சிலரே, சொல்லப்படாத, பேசப்படாத செய்திகளையும் கேட்கிற கூர்மையான காதுகள் பெற்றிருக்கிறார்கள். மறைக்கப்பட்டவற்றைக் காணும் கண்களும் சொல்லப்படாதவற்றைக் கேட்கும் காதுகளும் உள்ளவராக நாம் ஆவது எப்போது...?

இப்படி நுட்பத்தைப் புரிந்து கொள்ளும் ஆர்வமின்றி அல்பத்தை அக்கறையோடு தேடுகிறவரை என்ன சொல்வது? எங்கே வைப்பது?

ஒருமுறை மகாபாரதச் சொற்பொழிவில் தர்மம், அதர்மம் பற்றி ஆழமான உரை ஒன்றை நிகழ்த்திவிட்டு மேடையை விட்டு இறங்கினேன். பலரும் பலவித சந்தேகங்களைக் கேட்டார்கள்... நீண்ட நேரம் காத்திருந்த ஒருவர் ஒரு வெள்ளைத் தாளை நீட்டி "சார்... ஒரு உதவி... மகாபாரதத்தில் துரியோதனன் பெயர் தெரிகிறது. தம்பிகள் 99 பேருடைய பெயரையும் ஒருவரும் சொல்லுவதே இல்லை. அவற்றை நீங்கள் எழுதித் தர முடியுமா?" என்றார்.



**சொல்வேந்தர் சுகிசிவம்**



"தெரிந்து உங்களுக்கு என்ன ஆகப் போகிறது?" என்றேன்.

"ஒரு திருப்திதான்... தெரிஞ்சுக்கணும்னு ஆசைப்பட்டேன்... இரவே மனப்பாடம் பண்ணி விடுவேன். நாளைக்கே செத்தாலும் நிம்மதியா சாவேன் பாருங்கள்" என்றார்.

அவர் நேற்றே செத்திருந்தாலும் நாட்டுக்கு ஒரு நஷ்டமும் இல்லை... தன் மூளையை அவர் ஒரு குப்பைத் தொட்டியாக்க விரும்புகிறார். அதற்கு என் உதவியை வேறு கேட்கிறார்... இப்படி வேண்டாத வேலை செய்கிற பல நூறு துரியோதனன் தம்பிகளை நான் அடிக்கடி சந்திக்கிறேன்.

என்னை விடவும் அதிக சங்கடத்திற்குள்ளான சொற்பொழிவாளர்களும் உண்டு. முன்பெல்லாம் மகாபாரதம் சொல்கிறவர்கள் பாடல்கள் எழுதப்பட்ட பனை

ஓலை ஏடுகளை முன்னால் வைத்துப் பார்த்துப் படிப்பார்கள். அந்த ஏட்டுச் சுவடியை ஒரு பட்டு நூலால் கட்டி வைத்திருப்பார்கள். அந்தப் பட்டு நூலைப் பிரித்து ஒரு பாகவதர் பாரதம் சொல்லத் தொடங்கும் போதே கணவரை இழந்த ஒரு பெண் கண்ணீர் விடத் தொடங்குவார். இவ்வளவு உருக்கமாக ஒருவரும் கதை கேட்பதில்லை என்று நினைத்த பேச்சாளர் "ஏனம்மா தினம் தினம் கண்ணீர் விடுகிறீர்கள்?" என்றார். "அந்த ஓலையைச் சுத்தி இருக்கே சிவப்பு பட்டு நூலு... அதே நூலுல தான் எங்க வீட்டுக்காரக இடுப்புக் கயிறு போட்டிருப்பாக... நெதம் அதப் பார்த்ததும் அவுக ஞாபகம் தான்" என்று கண்ணீரைத் துடைத்துக் கொண்டார் அம்மணி. ஏனடா இந்தக் கேள்வி கேட்டோம் என்று பாகவதருக்கும் கண்ணீர் வந்து விட்டது.

சில மாதங்கள் முன்பு பாரீஸ் போயிருந்தோம்... கவிஞர் பாரதிதாசன் என்கிற நண்பர் அர்ப்பணிப்புடன் நடத்தும் கம்பன் விழாவில் பேச்சு... புகழ் பெற்ற இரும்புக் கோபுரமாகிய ஈஃபில் டவர் பார்க்க அழைத்துச் சென்றார். வியப்பிலும், திகைப்பிலும், களிப்பிலும் ஆகாயத்தில் மிதந்து கொண்டிருந்தேன். அதே சமயம் இரவில் விளக்கொளியில் இதைப் பார்த்தால் இன்னும் அழகாக இருக்கும் என்று போதை ஊட்டினார் நண்பர்.

பாண்டிச்சேரிக்காரர் ஒருவர் எதிர்பாராத கேள்வியில் என்னைப் பூமிக்குக் கொண்டு வந்தார். "ஏன் தம்பி... இந்த இரும்பு சாமான் வித்தா என்ன விலைக்குப் போகும்?" என்றார். என் கற்பனை விமானம் தரை இறங்கிவிட்டது. எப்படி இவர்களுக்கு இது மாதிரி கேட்கத் தோன்றுகிறது என்ற எனக்கு ஆச்சர்யமாக இருக்கிறது.



இதற்கு நேர்மாறான ஒரு நிகழ்வு சொல்லுகிறேன். பாண்டிச்சேரியில், திருவாசகம் பற்றி ஒரு சொற்பொழிவு முடித்துக் கொண்டு சாப்பிடுவதற்கு ஹரி மெஸ் என்கிற அருமையான ஒரு குடும்ப உணவகத்திற்குப் போனோம். உணவக உரிமையாளர் எனக்கு உணவு பரிமாறிக் கொண்டே "திருவாசகம் பற்றிய பேச்சு... எனக்குத்தான் வரக் கொடுத்து வைக்கவில்லை" என்று வருந்தினார்.

பிறகு "ஐயா... திருவாசகத்தில் அதிசயப் பத்து... அற்புதப் பத்து என்று இரண்டு பதிகங்கள் உள்ளனவே... அதிசயத்திற்கும் அற்புதத்திற்கும் என்ன வித்தியாசம்? சொல்லக் கூடுமா?" என்றார்.

"ஒருவர் வாழ்வில் அதிசயம் பலமுறை நிகழ முடியும். ஆனால் அற்புதம் என்பது வாழ்வில் ஒரே ஒரு முறை நிகழ்வது... அதிசயத்திலிருந்து மீள்தல் சாத்தியமில்லை! இது பொதுவான நிலைப்பாடு. ஆனால் மணிவாசகர் நினைப்பு என்ன என்று மீண்டும் திருவாசகத்தைப் படித்துவிட்டு சொல்கிறேன்" என்றேன்.

நான் யூகித்தது போலவே திருவாசகத்தில் சிவபெருமான் அடியவர்களோடு தான் சேர்ந்த அனுபவத்தை அதிசயம் என்ற மணிவாசகர் ஆண்டவனோடு தாம் சேர்ந்த நிலையை அற்புதம் என்கிறார். மீள மீள நிகழும் அடியார் அனுபவமும் மீள முடியாதபடி நிகழும் ஆண்டவர் அனுபவமும் அதிசயம், அற்புதம் என்று வகைப்படுத்தப்பட்டுள்ளது. திருவாசகத்தின் உயிரைத் தொட எனக்கு வாய்ப்பளித்து என் உயிரைத் தொட்டது அந்தக் கேள்வி. இப்படி சூட்சுமத்தை நேசிப்பவர்கள் தானும் உயர்ந்து பிறரையும் உயர்த்துகிறார்கள். ஸ்தூலத்தை நேசிப்பவர்கள் தானும் கீழ் இறங்கி பிறரையும் கீழ் இறக்கி விடுகிறார்கள்.

# நளபாகம்



★ வெங்காயம், பூண்டை தண்ணீரில் தனித் தனியே போட்டு பிறகு உரித்தால் சுலபமாக உரிக்க வரும். கண் எரிச்சல் வராது.

★ கோதுமை உள்ள பாத்திரத்தில் ஒரு கொத்து வெந்தயக் கீரையைப் போட்டு வைத்தால் பூச்சிகள் அண்டாது.

★ பயிறு வகைகளை சிறிது விளக்கெண்ணெய் சேர்த்து கிளறி வைத்தால் பல நாட்கள் வரை புழுத்து போகாமலிருக்கும்.

★ புதிதாக வாங்கிய அரிசி வடிக்கும்போது குழைந்தால், அரை மூடி எலுமிச்சம் பழச்சாறு விட்டு, இறக்கினால் பொலபொலவென்று இருக்கும்.

★ பக்கோடா மொறு மொறுப்பாக இருக்க மாவைக் கலக்கும்போது சிறிதளவு நெய்யும், உப்பிட்ட தயிரும் கலந்து கொண்டால் போதும்.

★ ரவா லட்டு செய்யும்போது கையில் நெய்யைத் தடவிக் கொண்டு உருண்டைப்பிடிக்க, உருண்டை சுலபமாக வரும். வாசனையாகவும் இருக்கும்.

★ தேங்காயை சரிபாதியாக உடைக்க அதனை உடைக்கும் முன்பு தண்ணீரில் நனைத்து பின்னர் உடைத்தால் எளிதில் சரிபாதியாக உடையும்.

★ எலுமிச்சை பழங்களை உப்பு ஜாடியில் போட்டு வைத்தால் பழங்களை எப்போதும் புதிதாகவே காணப்படும் நிறைய சாறும் கிடைக்கும்.

★ ஊறுகாயை எப்போதும் கண்ணாடி பாட்டிகளில் போட்டு வைக்கவும். அவ்வாறு செய்தால் ஊறுகாய் கெடாமல் இருக்கும்.

★ உருளைக்கிழங்கு வேக வைத்து தோலை தூக்கி எறியாமல் முகம் பார்க்கும் கண்ணாடியைத் துடைத்தால் பளிச்சென்று இருக்கும்.

★ வெண்டைக்காய் கறி செய்யும்போது சிறிது தயிர் ஊற்றி வதக்கினால் வழவழப்பு நீங்கி மொறுமொறுப்பாக இருக்கும்.

★ தேங்காய்ப் பால் எடுக்கும்போது சிறிது சமையல் உப்பைச் சேர்த்தால் நிறைய பால் வரும்.

★ கால்சியம் மாத்திரைகளை சாப்பிடுபவர்கள் நிறைய தண்ணீர் குடிக்க வேண்டும். அப்போதுதான் கிட்னியில் கல் உண்டாகாது என மருத்துவர்கள் கூறுகிறார்கள்.

★ முட்டை 1 மாதம் வரை கெடாமல் இருக்க அதன் மீது சமையல் எண்ணெய்யை தடவி வைக்கலாம்.

★ மழை, குளிர் காலங்களில் வடகம் நமத்துப் போய் நன்றாகப் பொரியாது. வெறும் வாணலியை அடுப்பில் வைத்துச் சூடேற்றி அதில், வடகத்தைப் போட்டு, சற்றுப் புரட்டி எடுத்து விட்டு எண்ணெயில் பொரித்தால் நன்றாகப் பொரியும்.

★ வாழைத்தண்டுகள், கீரைத் தண்டுகள் மற்றும் கொத்தமல்லி இலைகள் வாடாமல் இருக்க அவற்றை அலுமினிய காகிதத்தில் சுற்றி வைக்கலாம்.

★ கோதுமை மாவு அரைக்கும்போது அதனுடன் சோயா பீன்ஸையும் சேர்த்து அரைத்தால் சப்பாத்திகள் ஊட்டம் கூடுவதுடன் ருசியும் அபாரமாக இருக்கும்.

★ டீத்தூள் வைத்திருக்கும் பாட்டிலில் உபயோகித்த ஏலக்காய் தோல்களைப் போட்டு வைத்திருந்தால் டீ ஏலக்காய் மணத்தோடு சுவையாக இருக்கும்.

# மானுடத்தின் திருவிழா

கவிஞர் அப்துல் ரகுமான்

கோலத்திற்காக வைக்கும்
புள்ளிகளைப் போல்
வானத்து நட்சத்திரங்களில்
ஒழுங்கு இல்லை ஆனால்
நட்சத்திரங்களின் அழகு
கோலப் புள்ளிகளில் இல்லை

நாம் வெட்டும் வாய்க்காலைப் போல்
நதிகள் நேராக ஓடுவதில்லை - ஆனால்
நதிகளின் சௌந்தர்யம்
நம் வாய்க்கால்களில் இல்லை

நாம் வளர்க்கும் பூங்கா மரங்களைப் போல்
காட்டு மரங்களில் கட்டுப்பாடு இல்லை
ஆனால் காட்டின் கம்பீரம்
நம் பூங்காவில் இல்லை
நாம் பாடும் சங்கீதத்தைப் போல்
குயிலின் பாட்டில் இலக்கணம் இல்லை
ஆனால் குயில் பாட்டின் குதூகலம்
நம் சங்கீதத்தில் இல்லை
நாம் ஆடும் பரதம் போல்
மயிலின் நடனத்தில் தாள லயம் இல்லை
ஆனால்
மயில் நடனத்தின் பரவசம்
நம் பரதத்தில் இல்லை
படைகளின் நடையைப் பேலால்
கடல் அலைகளில் அணிவகுப்பு இல்லை
ஆனால்
அலைகளின் உல்லாசம் படைகளில் இல்லை

நாம் எழுதும் வாக்கியம் போல்
மின்னலில் மரபு இல்லை - ஆனால்
மின்னலின் அர்த்த ஆழம்
நம் வாக்கியங்களில் இல்லை
நமக்கிருப்பது போல்
பறவைகளுக்கு நாடுகளும்
எல்லைகளும் இல்லை
ஆனால் பறவைகளின் சுதந்திரம்
நம்மிடம் இல்லை

நமக்கிருப்பது போல் மேகங்களுக்குப்
பாதைகளும்
பயண லட்சியங்களும் இல்லை - ஆனால்
மேகங்களின் ஆனந்தம் நம்மிடம் இல்லை
நமக்கிருப்பது போல்
மலர்களுக்கு அரசியல் இல்லை - ஆனால்
மலர்களின் கொண்டாட்டம் நம்மிடமில்லை
நமக்கிருப்பது போல்
மிருகங்களிடம் மதம் இல்லை - ஆனால்
மிருகங்களின் கள்ளம் கபடமில்லாத குணம்
நம்மிடமில்லை

நாம் அடைப்புக் குறிகளுக்குள்
அடைக்கப்பட்டவர்கள் விற்பனைக்காகச்
சந்தையில் கூறு கட்டிக் கிடப்பவர்கள்
சட்டத்தின் கைதிகள்
சம்பிரதாயத்தின் கொத்தடிமைகள்
அட்டவணைகளுக்குப் பிறந்தவர்கள்
செயற்கையின் பலி பீடத்திற்காக
வளர்க்கப்படும் ஆடுகள்

இலக்கணங்களுக்கு அப்பால் இருக்கிறது
அழகு
செயற்கைக்கு அப்பால் இருக்கிறது
சுதந்திரம்
எங்கே அழகும் சுதந்திரமும் உண்டோ
அங்கேதான்
மானுடம் திருவிழாக் கொண்டாடுகிறது.

## கொசுக்களை விரட்டும்

# நொச்சி



மலைப்பகுதி, தோட்டப்பகுதி, வயல்வெளி எனப் பல இடங்களிலும் இயல்பாக வளரும் மூலிகை இனங்களில் மிகச்சிறந்த மூலிகை நொச்சி என்று சொல்லலாம்.

களைச்செடிகளில் இவையும் ஒன்று என்று நொச்சியை கூறுகிறார்கள். நொச்சி புதர்ச்செடியாகவும், மரமாகும் வளரக்கூடியது. சிறுமர வகையைச் சார்ந்தது. மூன்று அல்லது ஐந்து கூட்டிலைகளைக் கொண்டிருக்கும். இலையின் அமைப்பை மயிலின் காலடியோடு பழங்காலத்தில் ஒப்புமைப்படுத்தி இருக்கிறார்கள். ஈட்டி வடிவ இலைகளின் மேல்புறம் பசுமையாகவும், அடிப்பகுதி சற்று வெளுத்தும் காணப்படும்.

'வைடெக்ஸ் நெகுண்டோ' (Vitex negundo) என்பது இதன் தாவரவியல் பெயர். 'வெர்பினேசியே' (Verbenaceae) குடும்பத்தைச் சார்ந்தது. லூடியோலின் (Luteolin), வைடெக்ஸிகார்பின் (Vitexicarpin), யுர்சோலிக் அமிலம் (Ursolic acid), பீட்டா சைடோஸ்டீரால் (Beta - sitosterol), நிஷிடைன் (Nishindine), இரிடாய்ட் கிளைக்கோசைடு (Iridoid glycoside) ஆகிய தாவர வேதிப்பொருட்கள் காணப்படுகின்றன.

நொச்சியில் குறிப்பிடத்தக்கது வெண் நொச்சி, கரு நொச்சி (Vitex Negundo, நீர் நொச்சி ஆகும். கருநொச்சி சித்த மருத்துவத்தில் பயன்படுத்தப்படுகிறது.

வெண்ணொச்சி மரமாக வளரும். கருநொச்சி புதர்ச்செடி, வெண்ணொச்சி ஆற்றோரங்களில் வளரும். கருநொச்சி காடுமேடெல்லாம் வளரும். வெண்ணோச்சி மார்கள் வேலி பின்னவும், தட்டுக்கூடை பின்னவும் பயன்படும். கருநொச்சி மூலிகையாகவும், வயல்களுக்குத் தழையுரமாகவும் பயன்படுத்தப்படும். கருநொச்சியை மாடுகள் மேயும். வெண்ணொச்சியை வெள்ளாடு கூட ஓரிரு வாய்தான் கடிக்கும். கருநொச்சி இலையின் மணம் காரணமாகச் சில பூச்சிகள் இதனை நெருங்குவதில்லை. ஆதலால் தானியப் பாதுகாப்பில் கருநொச்சி இலை பயன்படுகிறது. ஓலைச் சுவடிகளைப் பூச்சிகளிடமிருந்து பாதுகாக்கவும் இதைப் பயன்படுத்தியுள்ளனர்.

நித்தில், நிர்க்குண்டி, நெர்க்குண்டி, இந்திர சூரியம் போன்ற வேறு பெயர்கள் நொச்சிக்கு இருக்கின்றன.

சிந்து' என்றால் மலர் என்ற அர்த்தத்தில், இதன் மலரை மையப்படுத்தி 'சிந்துவாரம்' எனும் பெயரும் உள்ளது. 'சிந்துவாரம்' என்றால், 'வாத பித்த கபத்தை' உடலிலிருந்து வெளியேற்றாமல், சம அளவில் நிலை நிறுத்தும் பொருள் என்று அகராதி பதிவிடுகிறது.

இந்த செடியின் வேர், பட்டை, விதை, பூக்கள் என முழுத்தாவரமுமே மருத்துவ குணங்கள் நிறைந்தவை. நொச்சியின் வேர்ப்பகுதிக்கு பாம்பு விஷத்தை முறிக்கும் தன்மை உள்ளது என்று ஆய்வு தெரிவிக்கிறது.

**மருந்தாக:**

கொசுக்கள், பூச்சிகளை விரட்ட இதன் இலைகளைப் பயன்படுத்தும் நோக்கில் பல்வேறு ஆய்வுகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. 'ப்ரோஸ்டாகிலான்டின்' (Prostaglandin inhibiton) உற்பத்தியைத் தடுப்பதன் மூலம், தன்னுடைய வீக்கமுறுக்கி, வலி நிவாரணிச் செய்கையை நிலைநிறுத்துகிறது. இதிலிருக்கும்



பாலிஃபீனால்கள், எதிர்-ஆக்ஸிகரனி செயல்பாட்டை வெளிப்படுத்துகின்றன. பாம்பின் விஷத்தை முறிக்கும் தன்மை இதன் வேருக்கு இருப்பதாக ஆய்வு உறுதிப்படுத்துகிறது.

பல்வேறு தாவரங்களும் ஒரு சிறப்பான நறுமண எண்ணெயைத் தத்தம் இலைகளில் கொண்டிருக்கும். நொச்சியில் இருக்கிற இந்த நறுமண எண்ணெய் நம்முடைய சுவாசப் பாதையில் இருக்கிற சளி கடினப்பட்டு விடாமல் அதனை நெகிழ்த்தி, கிருமிகளையும் கொன்று அதன் மூலமாக சளியை இளக்கி வெளியேற்றிவிடும்.

இதற்காகவே சுவாசம் எளிதாக வெறும் தண்ணீரை கொதிக்க வைத்து ஆவி பிடிக்கலாம் என்று சொல்கிறார்கள். முதியவர்களுக்குக் கொஞ்சம் துளசி இலை மற்றும் நொச்சி இலையைப் போட்டு ஆவி பிடித்தல் உதவியாய் இருக்கும். சித்த, ஆயுர்வேத மருத்துவ முறைகளில் வெப்பம் அளித்தல் என்பதும் முக்கியமான ஒரு முறை. அதாவது உடலில் இருந்து வியர்வையை ஏற்படுத்துகிற நிலை. உடலில் சேரும் வேண்டாத அசுத்தங்களை வெளியேற்றுவதற்கு, உடலை எளிதாக ஆக்குவதற்கு இது உதவும். கிருமிகள், வேண்டாத அசுத்தங்கள், எண்ணெய் பசையினால் ஏற்படும் கரும் புள்ளிகளைத் தவிர்ப்பதற்கும் நொச்சியில் இருக்கிற நறுமண எண்ணெய் உதவுகிறது.

### கொசுவை விரட்டும் நொச்சி

இன்று கொசுக்கள் காரணமாக ஏற்படும் டெங்கு உள்ளிட்ட பல நோய்களும் நமக்கு பெரிய சவாலாக இருந்து வருகிறது. இதற்கு நொச்சி சரியான நிவாரணமாக இருக்கும். இந்த நறுமண வாசனை காரணமாக கொசுக்கள் வீட்டைச்சுற்றி அண்டாது. நொச்சி கொசுக்களை ஒழிப்பது இல்லை. இருக்கும் இடத்தில் கொசுக்களை அண்ட விடாமல் தடுக்கும் என்பதையும் புரிந்துகொள்ள வேண்டும். அதேபோல் மழைக்காலங்களில் நொச்சியில் உள்ள நறுமண அளவு கொஞ்சம் குறைவாகவே இருக்கும். அந்த மழை பருவத்தில் நொச்சி இலைகளை உலர வைத்து அதனைப் புகைபோட்டால் கொசுக்களை விரட்டலாம்.

### நொச்சி இலை மருத்துவ குணங்கள்

நொச்சி இலையை துணியில் அடைத்து அதை தலையணையாக பயன்படுத்தினால் தூக்கம் நன்றாக வரும். சைனஸ் இருப்பவர்கள் தினசரி இந்த தலையணை பயன்படுத்தினாலே பலன் கிடைக்கும். கழுத்துவலி, கழுத்தில் நெறிகட்டுதல், நரம்பு கோளாறுகளால் கழுத்துவலி என அவதிப்படுபவர்களுக்கு இந்த தலையணை மருத்துவம் கைகொடுக்கும்.

மூட்டுவலி இருப்பவர்கள் நொச்சி இலைச்சாறை மூட்டுகளின் மீது தடவி வந்தாலும் வலி குறையும். புண்களின் மீது இதன் சாறை தடவி வந்தால் சீழ் வரும் நிலையில் இருக்கும் புண்களை கூட ஆற்றும். இதன் இலைச்சாறை கொண்டு தயாரிக்கப்படும் தைலத்தை காய்ச்சி வைத்துகொண்டால் வலி வரும் போதெல்லாம் வலி நிவாரணியாக பயன்படுத்தலாம்.

நீல நொச்சி கருப்பை நோய்களுக்கு சிறந்தது. இன்னொரு முக்கியமான விஷயம் என்னவெனில் இச்செடியில் மலர்கள் பூக்கும்போது கொத்துக்கொத்தாக அடர்ந்த கத்திரி பூ நிறத்தில் பூத்திருக்கும். இந்த பூக்களில் உற்பத்தியாகிற தேனுக்கு உடல் வலியை, வீக்கத்தைப் போக்குகிற தன்மை உண்டு. ஒரு கிளையை வெட்டி வைத்தால் கூட நன்றாக வளரக்கூடிய நொச்சி, பல்வேறு சிகிச்சைகளை செய்வதற்கு உதவியாக இருக்கும். நொச்சியினை நாம் வளர்க்க வேண்டியது அவசியம். மிக எளிதாக வளரும். வெளிப்பயிராக வளர்க்கலாம்.

# வருந்துகிறோம்



திருப்பூர் K.கணபதி செட்டியார் குமாரரும்,
24 மனை தெலுங்கு செட்டியார்கள் தலைமை சங்க
முன்னாள் துணை செயலாளரும்,
திருப்பூர் 24 மனை சங்க முன்னாள் தலைவரும்,
நாரணாபுரம் ஸ்ரீ அங்காளம்மன் கந்தவங்கலவர்
குலக்கோயில் தலைவரும், திருப்பூர் சங்க உறுப்பினர்
G.S.முருகேசன் தகப்பனாருமான
திரு.**G. சண்முகசுந்தரம் செட்டியார் (G.S)** அவர்கள்
05.02.2021 அன்று இறைவனடி சேர்ந்தார்.



மருந்தியல் விஞ்ஞானி
Dr.K.ஆனந்த்குமார் அவர்களின் தந்தையார்
வேட்டைக்காரன்புதூர்
திரு.**V.K. கனகசபாபதி செட்டியார்** அவர்கள்
(மும்முடியர் குலம் - 16 வீடு)
12.01.2021 அன்று இறைவனடி சேர்ந்தார்.





தலைமைச் சங்க முன்னாள் துணைத் தலைவரும்
வடுகபட்டி பேரூராட்சி முன்னாள் தலைவருமான
தெய்வத்திரு. K.B.துரைராஜ் அவர்களின் மனைவி
திருமதி. **D. பரமேஸ்வரி அம்மாள்** அவர்கள்
12.01.2021 அன்று இறைவனடி சேர்ந்தார்.



பருகூர் ஊர்செட்டியார்
திரு. **T. ரங்கப்பன்** அவர்கள்
18.02.2021 அன்று இறைவனடி சேர்ந்தார்.

இவர்களது மறைவுக்கு குலமுரசு சார்பில் ஆழ்ந்த வருத்தத்தையும்
இரங்கலையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

Published by Dr. Durei Angusamy on behalf of 24 Manai Telugu Chettiar Charitable Trust from 155/203, E.V.R. High Road, Kilpauk, Chennai - 10. and Printed by S.Radhakrishnan at Sri Jayalakshmi Art Printers, 333, Puthu Nagar West Avenue, M.K.B. Nagar, Vyasarpadi, Chennai - 39. Editor: Dr. Durei Angusamy

# கண்ணீர் அஞ்சலி







தோற்றம்
15-02-1943

மறைவு
12-01-2021

## திரு. V.K.கனகசபாபதி செட்டியார்

**(ஆனந்தா ஸ்டோர்ஸ், வேட்டைக்காரன்புதூர்)**

12-01-2021 செவ்வாய்க்கிழமை அன்று இறைவனடி சேர்ந்தார் என்பதை
ஆழ்ந்த வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இங்ஙனம்,

மனைவி : **K.காந்திமதி கனகசபாபதி**

மகன்கள் : **Dr.K. ஆனந்த்குமார்**
**K. ரவிசங்கர்**

மருமகள்கள் : **A.சாந்தி ஆனந்த்குமார்**
**R.ஜெயசித்ரா ரவிசங்கர்**

பேத்திகள் : **A. தன்யா, A. காவியா**
**R. அஸ்மிதா, R. சுஸ்மிதா**

வேட்டைக்காரன்புதூர்.

If undelivered, Please return to:
203/155, E.V.R. High Road,
Chennai - 600 010.

Date of Publication Every Month 9th, Due Date of Posting 15th - 21st of Every Month. Posted at Egmore RMS Patrika Channel.
24 MANAI KULAMURASU TAMIL MONTHLY POSTAL REGISTERED NO. TN/CCN/593/2019-2021
LICENCE OF THE POSTAL REGISTERED WPP No. TN/PMG(CCR)/WPP604/2019-2021
REGISTERED WITH REGISTRAR, NEWS PAPER OF INDIA TNTAM/2013/48200